கூளுற்றவர்போலுஞ்சொற்சாதுரியமுட
ளுளைப்படகட்டியலமலத்தி மீள. (க௱சுரு)

மடக்கிப்பொருளைவசப்படுத்தினாளைக்
கடத்துவதில்வல்லாளகண்டர் புடத்தெடுத்தங். (க௱சுசு)

காய்ந்தபுலிமன்னராண்மனையிற்பட்டவைத்
தீய்ந்திடும்பொன்சோர்வுக்கிடமிலதாய் வேந்தரன்று. (க௱சுஎ)

செங்கையில்வாளேந்திரண்டுசேவகர்பாராகியமித்
தங்குநிற்பத்தட்டான்கண்டையமீ ரிங்கு. (க௱சுஅ)

கறையூர்ந்தகத்திகரம்பிடித்தவாறே
தறைவீரென்றேருதஅரேபாய் நிறைதீர்ந்த. (க௱சுகூ)

விப்பொன்னிலெட்டுவளையேனுங்கவரிலுஞ்சிரசைத்
தொட்பென்றுவீழ்த்துணிப்பமெனச் செப்பலுங்கைப். (க௱எ0)

போதடக்குஞ்செம்பொனையாத்தேதலைபோமேயெனவாய்
மீதடிப்பான்போலும்விழுய்கிவிட்டான் சூதடர்த்திச். (க௱எக)

செம்புருக்கியுள்ளேசெலுத்திநிறைகாட்டுமந்த
வம்பர்கள்தன்சூதறியவல்லவ ரிம்பாதனிற். (க௱எஉ)

றன்னகத்தைக்கொண்டதட்டார்சங்கடத்துக்கஞ்சியன்றே
பன்னகத்தைப்பூண்டான்பரமசிவ னின்னவர்பாற். (க௱எங)

றோணுமலீந்துதொடர்ந்துதொடர்ந்துநிதம்
வீணையலைந்துமெலிவதினும் பேணுமுக. (க௱எச)

லத்தனையுமோர்மறையோனங்கையிட்டுநீர்வார்த்துத்
தத்தமதுசெய்தாலுந்தர்மமே யெத்துவழி. (க௱எரு)

வண்டப்பிரட்டர்நயவாக்குறுதியில்லாதார்
கண்டித்துக்கேட்பதற்குங்காலமில்லைத் தெண்டிக்கத். (க௱எசு)

தக்கவதிகாரிகளுந்தந்நகைவாங்குதற்கு
முக்கமட்டும்பார்த்துமுடியாமல் வெட்கமுற்றுப். (க௱எஎ)

பேசாதிருந்துவிட்டார்பேதாய்நமக்கடங்கி
யாசாரிசற்றுமசைவானோ நேசமுள்ள. (க௱எஅ)

வர்த்தகர்பானன்னகையாய்வாங்கிப்புனைந்திதனைப்
பர்த்திசெய்வேன்சற்றேயதருதே கர்த்தரெனும். (க௱எகூ)

ஐவிதப்ரமாவெனுந்தேவாமிஷையாற்பூமிசையுற்
றய்விசுவகோத்திரமுடையாரால் வையமிசை. (க௱அ0)

மின்னுலவுகோவில்குளமேலாலயப்ரதிஷ்டை
மன்னியபூண்தேர்களுயர்வாகனங்கள் பின்னுமுள. (க௱அக)

வெல்லாச்சிறப்புகளுமெய்திநலம்பெற்றிடுதல்
வல்லாரவர்தொழிலின்மாக்ஷியன்றே வல்லாரில். (க௱அஉ)

ஆற்றலுறுநாற்றொருவராயிரத்திலேயொருவ
ரெற்றமுளநல்லோரிருக்கின்றார் தோற்றமிகுங். (க௱அந)

தென்மதுரைமாநகரிற்றெற்குலவும்வீதியினிற்
றன்மதுரைபோலுந்தழைக்கிருப்போன் பன்மலர்க்காக். ()

கந்தவழுங்காஞூர்க்கணபதியாசாரிதிரு
மைந்தர்களிலாறுமுகமாவென்றும் செந்திருவைச். (க௱அரு)

சார்ந்தசிவகங்கைச்சமஸ்தானராசர்மெய்க்கத்
தேர்ந்தநயவேலைத்திறமையினான் சேர்ந்தொளிரும். (க௱அசு)

கற்பூரநால்மார்பன்கணபதியாசாரியருள்
சற்புனிதவான்ராமசாமியென்றும் அற்புதமாய்த். (க௱அஎ)

தெள்ளித்தெளிந்தபுகழ்த்தென்னைகையாகுசேன்
பள்ளித்தெருவிற்பயில்கனவான் ஒள்ளியசீர்த். (க௱அஅ)

தஞ்சைநகர்வாழ்ராமசாமியாசாரிதவ்
மஞ்சனெனவந்துதித்தவாய்மையினான் விஞ்சுதமிழ்க். (க௱அகூ)

கல்விபரசங்கமுள்ளான்கற்றோர்க்கமுதமன்னான்
கல்விற்பனனுலகநாதனென்றும் பல்குசுவை. (க௱கூ0)

முத்தமிழ்போல்முப்பொறிபோல்முக்கனிமுப்பால்போலு
மொத்துலகில்வந்துதித்தவுத்தமர்கள் சுத்தமுறக். (க௱கூக)

கோலமணிகுயிற்றுங்குந்தனவேலைத்தொழிலுஞ்
சாலவுநகாசியெற்றுந்தாட்டாளர் வேலையினிற். (க௱கூஉ)

கள்ளங்கவடறியார்கன்மஷஞ்சற்றேனுமில்லா
ருள்ளும்புறம்புமொத்தவுண்மையார் வள்ளலென. (க௱கூந)

மெய்த்தபுவிமன்னர்களும்மேன்மைப்ரபுக்களுந்தஞ்
சித்தமதிற்கொண்டாடுஞ்சீர்த்தியினா ரித்தலத்தின். (க௱கூச)

தான்செறிந்துமேவுமக்கசாலையரநேகரிலும்
நானறிந்தமட்டிலிவர்நாணயர்கள் தானுமெனக். (௧௮௯௫)

கந்தரங்கபத்தியுளாரன்னவர்பாலெய்தியிளம்
பைந்தோடிநீசொன்னபடிமுடித்துச் சிந்தையினி. (௧௮௯௬)

லன்புருகயானேயணிந்தழகுபார்ப்பேனென்
றின்புறவெந்நாளுமெனேயேய்க்கிறார் பொன்புதையல். (௧௮௯௭)

சேரவெடுத்தாலுமவர்செய்யார்நீநாணயமாய்த்
தாரதுண்மையாஞற்றறுகிறேன் ஊரிலெனேச். (௧௮௯௮)

சிந்திநகைக்கதெருவிலலேயவிட்டுப்
பாந்திநின்றுவேடிக்கைபாராதே காந்தனே. (௧௮௯௯)

பொல்லானென்றின்னபுகல்போதுடல்குழையப்
பல்லாடிமெத்தப்பயந்தவன்போல் நல்லாய்நீ. (௧௯௦௦)

சொன்னமொழிசொன்னீ ிருசெவியிஞராசந்
துன்னியபோற்றேகந்துடிக்குதே நன்னயமுப். (௧௯௦௧)

பட்டணத்திலேமூவர்பண்புடையரொன்றுமற்றோர்
கெட்டெணத்தைக்கொண்டகெறுவொன்றுந் தொட்டணைத்த. ()

நாயகன்சொற்கேட்டுநடுங்காதெனேப்பார்த்து
வாய்கொள்ளாவார்த்தைவழங்கினீர் தீயதொழிற். (௧௯௦௩)

சின்னமொறுக்காத்திருட்டுப்பயல்களைப்போ
லென்னேயொருக்கா லுமனத்தெண்ணுதீர் கன்னக்கோல். (௧௯௦௪)

சாந்துமிடமென்றுஞ்சாத்தாவிடமென்றுஞ்
சித்துவமிதார்க்குந்தெரியாதோ ஆத்தாடி. (௧௯௦௫)

மற்றவரைப்போனினைத்துமாதாபிதாவிடத்துங்
கற்றவித்தைகாட்டுங்கருத்துண்டோ சுற்றிமெல்ல. (௧௯௦௬)

யேய்க்கின்றகூத்திக்கிடுமருந்தையன்றுபெற்ற
தாய்க்கிடுவருண்டோசரசமாய்ப் போக்கிரிக. (௧௯௦௭)

னீனத்துவத்தாவிழுக்கேயென்போலனைய
மானஸ்தர்க்கெல்லாம்வசையாச்சே ஞானத்திற். (௧௯௦௮)

றேற்றமிலாலுன்கணவன்சீசீயெவரிடத்துங்
கிற்றிலுநம்பிக்கைகிடையாதே மாற்றலரும். (௧௯௦௯)

போற்றுபுகழ்நல்லதுக்கோர்பொல்லாதுபோலுமுமக்
கேற்றமணவாளனிவனுமோ சீற்றக். (கசக0)

கடுஞ்செட்டுக்காரனிதைக்கண்டிடிலப்பாடா
குடும்பத்தினேருங்குழப்பம் நெடுங்காலம். (கசகக)

பேச்சுவிளைந்துபிணக்காயிருவருக்கும்
மாச்சரியச்சண்டைவளருமே மூச்சுவிட்டால். (கசகஉ)

வம்புவருமேவெளிக்குவாராவிதுமிதனை
யெம்பிறர்க்குங்காட்டாதியற்றியே நொம்பவுநாள். (கசகங)

மிச்சமிலையஞ்சாறுவேளையிற்காதுங்காதும்
வைச்சதுபோற்றாரேன்மகனுனை யச்சமற்றுச். (கசகச)

சும்மாகொடுப்பீருஞ்சொற்படியேநற்பணியா
யெம்மாலோரட்டியிலாதீந்திடுவே னுர்மவர்க. (கசகரு)

ளற்புதநீராடையிலோடாணிகழன்றுடல
கற்பணிபோச்சென்னக்கலையுற்றார் சிற்பவிதிச். (கசககூ)

சூத்திரத்தாலன்றிச்சுழலாத்திறுகணியாய்
வார்த்துவலுவாயிறுக்கிமாட்டுவேன் சேர்த்தியுள்ள. (கசகஎ)

மாதிரியைக்கண்டுமடவார்பொருமையுற்றுக்
காதலனைப்போட்டுக்கசக்குவர்கள் சோதனையில். (கசகஅ)

மின்றிகழ்மாற்றென்பதுக்குமேலிருக்குஞ்சேதாரங்
குன்றியிடையேனுங்குறைவுபட நென்றைக்கும். (கசககூ)

கட்டுக்குலையாதுகண்காரச்செட்டிகள்பால்
வட்டமறக்காட்டிமதிப்பிநிவீர் மட்டுமலர். (கஎ00)

மாதாவனையமயிலேயுமதகுழகுக்
கோபணிதியிதையுருக்கிப் போதுமிடை. (கஎ0க)

யிக்கணமேதாரேனிதுபோகக்கையிருப்பு
ரொக்கமுள்ளதெல்லாமுதவுவீர் லக்கினநல. (கசஉஉ)

வேளையிதேதங்கம்விலைவாகவாங்கிவந்து
காலைமுதல்வேலைநடத்துவேன் கேளம்மா. (கசஉங)

வீட்டுக்குமெத்தவிருந்தினர்வந்தார்களிதற்
கிட்டியவெற்கூலியினிலேதேனு நீட்டுமென்று. (கசஉச)

சாலமிட்டுச்சொல்லவிவள்தன்னினைச்சமூப்பாலே
மாலையிட்டோர்கஞ்சாதமாநீவி யோலமிட்டுக். (கசஉரு)

கொல்புலியாத்தோல்போர்த்தகொள்கையான்றன்னைமெத்த
நல்லணிவனென்றேநனிமதித்துச் சொல்லரிய. (கசஉசு)

பொற்குழையலோடுபலபூஷணமுநல்கிவிட்டாள்
மற்கடத்தையொத்தமறிவில்லாள் சிக்கி. (கசஉஎ)

யுருவியகோலாளுபர்சகடயோகஞ்
சருவியதாமெனவுந்தட்டான் விரைவுடன்றன். (கசஉஅ)

வீட்டிற்புகுந்துரியமெல்லியற்குக்காட்டியவள்
வாட்டமுற்றகண்ணீரைமாற்றினாள் நீட்டியநற். (கசஉகூ)

றண்டுலமுங்காய்கறிகள்சாமான்பதார்த்தமெல்லாங்
கொண்டுவந்துமாளிகையிற்கோட்டினான் கண்டையிட்ட. (கசந0)

சோமன்வயிரக்கடுக்கன்சோதிதிகழ்மோதிரத்தில்
மாமணியுந்திட்டிடவனைந்திட்டா ஞமுடையாட். (கசநக)

கந்தவளைவிட்டாளலங்காரப்பட்டெடுத்தான்
மெத்தநகைபூட்டிமினுக்கிவிட்டான் நதத்துவ. (கசநஉ)

குழந்தைகளுக்கேற்றகுறும்பணிகள்பூட்டி
வழங்கவுமீதுமகிழ்ந்தான் கிழம்படுதாய். (கசநந)

சாடையிலேடார்த்துமகன்றன்பாலெருங்கியிந்த
வாடையிலேநான்கிடந்துவாடையிலே லேடியவ. (கசநச)

ளஞ்சனைமைக்காரியதிபசம்புக்காரிமகா
பஞ்சரிப்புக்காரியயில்க்காரிக் கஞ்சியந்த. (கசநரு)

காச்சியாளுக்குமட்டுநல்லினையோநானிருக்கும்
காட்சியைநீகண்ணாரக்காண்கிலேயோ வாய்ச்சநெடுங். (கசநசு)

காலமகவில்லாமற்கன்றியுனதத்தனொடு
சாலவும்யானேகதீர்த்தலங்கள்சுற்றி மேலெனவுங். (கசநஎ)

கண்டகண்டகோவிலுக்குங்காணிக்கைதான்செலுத்தி
யண்டரியதீர்த்தங்களாடிவந்துந் தொண்டர்களா. (கசநஅ)

மாண்டபரதேசிகளுக்கன்னம்படைத்துமிக
நீண்டவரசுக்குநிதநீர்வார்த்துந் தேண்டரிய. (கசநகூ)

தீக்கையுபதேசமுற்றுஞ்சேனைவிரதம்புரிந்தும்
ஊக்கரியகெற்பமுறலானேன் ஆக்கையினிற். (கசச0)

பச்சைநரம்பெய்தமதிபத்துஞ்சுமந்துநிறைந்
தொச்சமறப்பெற்றேனுன்னைமணிபோம் செச்சைநறு (௧௪௪௧)

நீராட்டித்தாராட்டிநீடம்புலிகாட்டிப்
பாராட்டிச்சீராட்டிப்பாதுற்றேன் ஓர்வேளை. (௧௪௪௨)

நோயணுகக்காணின்மனநோனுதொருமருந்துக்
காயடவிதோறுமலைந்துழல்வே னேயாம (௧௪௪௩)

லெத்திறத்தும்பட்டேனிராப்பகலோர்போதிலுங்கண்
ணித்திரைசற்றுண்டாகினைவுண்டா முத்தனையாய். (௧௪௪௪

நீபிறந்தோராண்டுநிறைவுறுமுன்னுந்தை
நீபறந்தகாட்டினிடைச்சென்றெரிந்தான் சோபமுற்று. (௧௪௪௫)

வண்ணக்கலையிழந்தமான்போலொளிமழுங்கி
மண்ணிற்படிந்தமணியேபோல் பெண்மைக (௧௪௪௬)

குரியநிறைநலறுதாழியத்திப்புச்சுண
டரியபலகஷ்டமடைந்தேன் இருநிலத்தி. (௧௪௪௭)

லுற்றாருக்குற்றுறவோமற்றல்லதுணை
யற்றோர்க்குதவியுமற்புண்டோ பெற்று. (௧௪௪௮)

ரிருந்தும்பயனிலவாலெவ்வுயிருங்காக்கும்
பரம்பொருளேதஞ்சமெனப்பற்றி வருந்தியுனைப். (௧௪௪௯)

பொன்னாலங்கரித்துப்போஷித்துருகிருந்து
மன்னர்மக்கள்போலும்வளர்த்தேனே தென்மொழியுஞ். (௧௪௫௦)

சாதித்தொழிலும்வெகுதந்திரமுமந்திரமும்
போதித்துவைத்தனர்நம்புண்ணியர்கள் காதலநீ. (௧௪௫௧)

யெண்ணுஞ்சிறுபருவத்தேநன்மணமுடித்துக்
கண்ணாற்களித்துக்கதிபெறுவா னெண்ணியெண்ணி. (௧௪௫௨)

யெத்தனையோபெண்ணனைந்துமென்னுளமொப்பாமலுஞ்சொந்
தத்திலிவள்நாத்திமகளாதலால் மொத்தைதயிரு. (௧௪௫௩)

நான்குவருடஞ்சமைந்துநாற்றமெடுத்துக்கிடந்தாள்
நீங்கியழினிறங்கெட்டாள் யான்கருத்துற். (௧௪௫௪)

றன்றேபெண்பாவமிவட்காதாரம்வேறிலைகம்
சொன்னபடிகேட்குஞ்சுகிர்த்துமுண்டாம் பின்னடியிற். (௧௪௫௫)

பெண்ணடியில்லாநமக்குப்பின்றளர்ந்தகாலமதி
லுண்ணொடியாதொட்டுமுதவுமென்றும் பெண்ணணீ. (௧௪௫௬)

ரணைகடந்தநீலிக்கழகில்லாதேனும்
குணமிருந்தாற்போதுமெனக்கோரித் துணிப்புறநான். (௧௪௫௭)

வேணுமென்றுகொண்டுவந்தவெங்கஞ்சிறுக்கிமக
ளாணவமாயென்னையவமதித்தாள் கோணிமன. (௧௪௫௮)

நாணித்தலைகவிழநாவெடுத்துப்பேசவொட்டா
தாணித்தரமாயடக்கிவிட்டாள் வீணிலவச். (௧௪௫௯)

சேட்டையுறப்பேசித்தெருவிலுள்ளபோர்கடமைக்
கூட்டமிட்டென்குட்டைக்குலைக்கிறாள் கோட்டிகொண்ட. (௧௪௬0)

நாயினுங்கேடானேனோர்நாளேனுமத்தையென்று
வாய்குளிரச்சொன்னவசனமுண்டோ பேயுமஞ்சக். (௧௪௬௧)

காத்திரநீலிக்கோலங்காட்டியவளாடுகின்ற
கூத்துக்குமத்தளநீகொட்டுகிறா யாத்தாளொன். (௧௪௬௨)

னன்புடையாட்கேனீயடங்கிநடந்தாயிலையென்
றென்பொடியத்திட்டவுன்றாலேலாதே வன்புறையா. (௧௪௬௩)

யேண்டியகங்காரமுனக்கிவ்வளவாவென்றுபுடைத்
தாண்டடக்கினாலலவோஅஞ்சுவாள் ஈண்டெதிர்நீ. (௧௪௬௪)

பார்த்திருக்கப்பேசும்பழிப்புரையைக்கேட்டுமொரு
வார்த்தைகண்டிப்பாய்ச்சொலவும்வாயிலையே சேர்ந்த. (௧௪௬௫)

மனையாளைமஞ்சத்தில்மைந்தனைநெஞ்சத்தில்
வினையாளைவேலைமுடிவில் லெனமுதியோர். (௧௪௬௬)

தக்கவுரைதேர்ந்துஞ்சரணஞ்சரணமென்றே
விக்கியவள்காலடியில்வீழ்கின்றா யெக்குலத்தி (௧௪௬௭)

லானாலுமுன்போலறிவிலாக்காணேனீ
தானாபெண்கொண்டாய்தரணியினில் மேனாளோர். (௧௪௬௮)

வண்ணாரட்பையல்மனையாடனைக்குறித்தன்
றெண்ணாதிராமனையுங்கென்சொன்னான் கண்ணுறுக்கும். (௧௪௬௯)

நாட்டமவள்கண்டுநடுநடுங்கவேண்டாமா
ஓட்டையெனக்கால்வழிநீரோடாதா சேட்டைபண்ணித். (௧௪௭0)

தாங்குவதனாலுன்றலையிற்பிளகாயரைத்துத்
தீங்கரியசட்டஞ்செலுத்துகிறாள் ஈங்கிவள்தன். (௧௪௭௧

னாக்கையழுத்துநறுக்கினாலன்றோவென்
றீர்க்கவிராக்யசினந்தீரும் யேற்கையினீ. (௧௪௭௨)

சன்னதங்கொண்டாடத்தலையணையின்மந்திரத்தா
லென்னவிதஞ்சொல்லியுருவேற்றினளோ பொன்னினுநற். (௧௪௭௩)

றாயலவாவென்றுபக்ஷாத்தாபமின்றிநேற்றுவந்தாள்
மாயையிலேவீழ்ந்துமயங்கினையே தீயர்களு. (௧௪௭௪)

மேசயிடங்கொடுத்தாயென்செய்வாயானுமதைப்
பேசுவதிலென்னபெறப்போறேன் பீசிலுனக். (௧௪௭௫)

காறுமுழந்தான்பெரிதோவப்பாநீநல்லிலெனக்
காறுமுளந்தானென்றாளாங்கெழுந்து சீறியொரு. ௧௪௭௬)

## மாமிக்கும் மருமகளுக்குஞ் சண்டை.

வன்புலிபோற்பாய்ந்துமருமகள்தன்மாமிமுன்னின்
றென்புகன்றாயின்னமியம்புவாய் முன்னமிரு. (௧௪௭௭)

காலுவருடஞ்சமைந்துநாற்றமெடுத்தாளென்றும்
மேலழுகில்லாமூளிவேசையென்றும் ஞாலமதிற். (௧௪௭௮)

சீந்துவாரற்றுத்திரிந்தவளைக்கொண்டுவந்து
வாய்ந்தநம்மனையில்வைத்தனென்றுங் காந்தனிடஞ். (௧௪௭௯)

சொல்லிப்பரிசழித்ததோஷிக்குரங்கேயுன்
பல்லைப்பிடுங்கவொருபல்லிலையே யல்ல. (௧௪௮0)

தடக்கற்றநெஞ்சைலகிர்ந்தாறுகூறாக்கித்
தொடக்குற்றநாவைத்துணிப்பேன் விடக்கெடுத்த. (௧௪௮௧)

வங்குப்பற்றிப்பேய்நாயேவாயிலிடும்பானையே
சங்கைகெட்டுப்போனையேதானையே பங்கமுற்ற. (௧௪௮௨)

வெங்கக்கழுதாய்விருதா * வெறுங்கழுதா
யெங்கெங்கழுதாயிரப்புணியே பொங்கும்பா. (௧௪௮௩)

ஊட்டிவளர்த்தாலுமுயிர்தீர்விடமளிக்கும்
மோட்டரவையொத்தமுழுநீலி நாட்டிலுனை. (௧௪௮௪)

---

* வெறுங்கழுது - வெறும்பசாசு.

நல்லவளென்றுருணைப்பார்நாறச்சவமேயுன்
சில்வாயைப்பேர்த்துத்திருப்பட்டா வல்லிருளிற். (௧௪௮௫)

பூசலிடுபேய்க்கணமேபோழ்வாய்க்கிழட்டோரி
பேசுவதைப்பாரப்பாபெப்பெப்பே மாசுபட்ட. (௧௪௮௬)

வாருகோலாலுடலைவாட்டியெடுப்பேனுனக்கிங்
கார்சலிகைசொல்வாயறையிறேன் பாரெனவே. (௧௪௮௭)

காறியுமிந்தாளிவளுங்காறியுமிழ்ந்தாள்மருகி
தூறியிரைந்தாளிவளுந்தூறினள் மீறி. (௧௪௮௮)

யிடித்தாள்மருமகளங்கீண்டெழுந்துமாமி
கடித்தாளொருகரத்திற்கவ்வித் துடித்தவளும். (௧௪௮௯)

பற்றிமயிரைப்பிடித்தாள்பாழ்ங்கிழவிவவ்வால்போற்
றொற்றிமயிரைப்பிடித்துத்தொங்கினன் சிற்றிடையிற். (௧௪௯0)

றுத்தாரிப்பட்டுமெல்லச்சோர்ந்துநழுவியந்த
வித்தாரிகால்சறுக்கிவீழ்ந்திட்டா ளத்தருணம். (௧௪௯௧)

மாலேறிக்கொண்டமருமகளைப்போட்டமுக்கி
மேலேறிக்கொண்டாள்விசைக்கிழவி கோலியழு. (௧௪௯௨)

தாட்டியாறுலும்தயங்குசமயத்தினல்ல
வேட்டைவந்துசாய்த்தால்விடுவளோ ஆட்டமெல்லாங். (௧௪௯௩)

கண்டுவிலக்கியவன்காதலியைச்சீர்திருத்தி
நண்டுகளைநீக்கிநொசிவகற்றிப் பண்டுபெற்ற. (௧௪௯௪)

## தட்டான் தாயைக்கோபித்தல்.

வன்னைமேற்கோபமதிகரிக்கப்பின்னுமன்னை
தன்வதனநோக்கியிவைசாற்றுவான் யென்னிருகண். (௧௪௯௫)

ணுட்டியுடனீசரியோஅஞ்சாக்கிழப்பதரே
போட்டிபண்ணிச்சீரழிஞ்சுபோகாதே தாட்டுறுத்தும். (௧௪௯௬)

பாதுகைபோலொத்துப்படிந்துநடவாவிடிலென்
பேதையவளைப்படித்தாண்பேசுவாய் வாதுபடு. (௧௪௯௭)

பேயிறைஞ்சுசீர்மையிஞள்பேசியெனைத்தூஷணமா
யாயிரம்வைதாலுமெனக்கானந்தம் வாயிற். (கசகூஅ)

றிருகிருந்தசொல்லாற்சிலர்புறணிபேசி
யருகிருந்தாற்போதுமெனக்கன்பே யிருள்செறிந்த. (கசகூகூ)

பாதகமலம்படிந்தபாவியேன்மீதிலவள்
பாதகமலம்படிலென்பாவம்போம் கோதி. (கரு00)

லுவளேயென்றெய்வமவளேயென்செல்வ
மவளேயென்கல்விநிறையாஸ்தி யலட்கினமுங். (கரு0க)

தங்கப்பணியிடுவேன்தாவுகுழற்பூமுடிப்பேன்
குங்குமப்பொட்டிட்டுமுத்தங்கொஞ்சுவேன் செங்கையிஞல். ()

மஞ்சளரைத்துக்கொடுப்பேன்வண்ணமலர்க்கால்பிடிப்பேன்
இன்சொற்படிநடப்பேனென்னிஷ்டம் நெஞ்சிலுனக். (கரு0உ)

வேண்டிபொருமையிதற்கேனேவயிற்றெரிச்ச
லாண்டான்கிடைத்தவளதிர்ஷ்டம் வேண்டியொற்றைக் (கரு0ச)

கால்மேற்றவமிருந்துகர்ப்பமுற்றுப்பெற்றுளாம்
வால்தலையைக்கிள்ளிவளர்த்தாளாம் பாலப். (கரு0ரு)

பருவமணைஞ்சுட்டியெனைப்பார்த்தாளாமுள்ளத்
தருமைபுறக்கொண்டாடிஞளாம் மருமகளை. (கரு0சு)

வைத்தவரிசைக்குமதியாதிவளையவ
ளத்தையென்றுசொல்லியழைக்கலையாம் மெத்தமெத்தத். (கரு0எ)

தோதவித்துப்பேசுஞ்சுணைகெட்டமூளியுனக்
கேதமைத்தகான்கினிலொன்றேனுமே காதகியுன். (கரு0அ)

கோலவுடல்கூனிக்குறுகித்தளர்ந்துமின்னஞ்
சாலவகங்காரந்தளர்ந்திலவே வாலிபரா. (கரு0கூ)

பெண்ணரியபேர்மடிந்தாரியாதோவுன்வல்லுடலை
மண்ணரியுங்காலம்வராவிலையே திண்ணியவெங். (கருக0)

கூற்றுவனுமுன்னுயிரைக்கொள்ளாதகலின்று
சூற்றியகின்கொடுமைக்கஞ்சியன்றோ வேற்றுருவ. (கருகக)

நீலியெனவந்துதித்தாய்நீதொலைந்துபோமளவு
மோலமிட்டபூசலொழியாதே வாலொடுக்கிப். (௧௫௧௨)

பேசாதேபோவெளியிற்பேயேயெனச்சினந்து
கூசாதேபூதிக்கொடைகொடுத்தான் நேச. (௧௫௧௩)

மருமகனையன்றுமருவீடழைத்தான்
பரிசனமற்றியார்க்கும்பகர்ந்தான் மருகனுக்கு. (௧௫௧௪)

நற்சரிகைக்கட்டுவேர்க்கநல்கினான்றன்மகட்குப்
பொற்சரிகைப்பூண்பலவும்பூட்டினான் பற்பலகாற். (௧௫௧௫)

பந்திவிருந்திட்டான்பலகாரவர்க்கமிட்டான்
புந்திமகிழ்சீருதவிப்போக்கினான் சந்ததமும். (௧௫௧௬)

வாதாட்டுவேசையர்கள்மாயப்படுகுழிக்குஞ்
சூதாட்டுங்கோலித்தொடர்புற்றான் காதாட்டிச். (௧௫௧௭)

செல்லநகைபூணச்சிறுதேட்டுச்செல்லியன்னாள்
நல்கும்பொருளனைத்தும்நாசமாய் வல்விலங்கிற். (௧௫௧௮)

## நகைசெய்யக்கொடுத்தவள் தட்டானைக் கேட்குதல்.

காட்டானையுண்கனிபோற்கையிலொருகாசுமில்லா
தோட்டாண்டியானானொடுங்கினான் கூட்டு. (௧௫௧௯)

நகைமுடிந்ததாவெனவுநங்கைவரிலெல்லா
நகைமுடிந்ததென்னநடித்துப் பகலிரவும். (௧௫௨௦)

பட்டரைவைத்தேவேலைபார்க்கிறதுபோலுமொன்றைத்
தட்டுவதுஞ்செம்புருக்கிச்சாய்ப்பதுவு மட்டமுலீற். (௧௫௨௧)

பித்தளையைக்காய்ச்சியிந்தப்பேதைசெவிவிடைக்கச்
சுத்தியல்கொண்டெத்தித்துவைக்கிறதும் மெய்த்திடுமுன். ( )

நேட்டில்நகைசெய்யாதேசின்னாளிப்படியே
நீட்டுவல்லாரென்றுகம்பிநீட்டுவதும் மீட்டிவனோ. (௧௫௨௨)

யேறிட்டுப்பாராமலேக்கியபின்னற்கொடியை
யேறிட்டிருப்பவன்போலேய்க்கிறதுஞ் சீறியதைக். (௧௫௨௩)

காட்டென்றுரைக்கிற்கடுகடுத்துப்பேசியே
காட்டமுடனேர்தகட்டைக்காட்டுவதும் திட்டிநகை. (கருஉரு)

வேலையெலாந்தீர்ந்ததினிமேலிரண்டுநாட்பிடிக்குங்
கூலியினிற்சொச்சங்கொடாததேன் ஏல்லையொடு. (கருஉசு)

இட்டவட்டமாயொழுங்காய்ச்சேர்மானமாக்கியதை
யொட்டியபின்றேனுமுருப்படியாய்க் கிட்டுமெனச். (கருஉஎ)

சொல்லிவெகுநாட்கடத்தித்தோகையினிலேசில்விட்டாள்
மெல்லவிதைவிட்டுவெளியேறிச் செல்லுவதே. (கருஉஅ)

## தட்டான் ஊர் விட்டோடுதல்.

பேராளப்பென்றோர்ந்தவன்பெண்டீர்க்குமட்டும்வற்புறுத்திக்
கேரளத்தைநோக்கிவைச்சுக்கிண்ணினனே பாரியதன். (கருஉகூ)

## நகைக்காரி புலம்பல்.

பொன்னிழந்தமங்கையிந்தப்போர்க்காளிபோனவிடந்
தன்னையறியாமற்றடுமாறி யென்முதலைத். (கருஙo)

தட்டானென்றெண்ணியல்லோசாதித்தேன்கட்புலனிற்
றுட்டனெனக்குநின்றுசாதித்தா யெட்டாநாட். (கருஙக)

போட்டுவிடுவேனெனவும்போதித்தசொற்போலும்
போட்டிபண்ணிவாயில்மண்ணைப்போட்டனையா வீட்டிலுந்தன்.

மங்கையுனைக்காணனென்றுமாரீசம்பண்ணுகிறா
ளெங்கேபறந்தாயிடந்தெரியேன் சிங்கலும்பா. (கருஙங)

கொள்ளைக்கழிச்சலுனைக்கொண்டுபோய்விட்டனவோ
துள்ளத்துடிக்கச்சுருண்டாயோ கள்ளரவம் (கருஙச)

பற்றிப்பிய்ங்கினவோபாரச்சடாமுனிதா
னெற்றியுனைப்பாய்த்தெறிக்கனவோ வெற்றியுன் (கருஙரு)

மீதுவிழுந்தனவோமெத்தகரித்துவிப்
போதிபமனூரிற்புகுந்தனையோ ஆகிநகை (கருஙசு)

முற்றுங்கவர்ந்துவெறுமூளியாக்கினையே
பற்றியெரியுதடாபாழாவாய் பெற்றமகன். (௧௫௩௭)

தன்றலையின் மீதடித்துச்சத்தியமுஞ்செய்தனையே
நன்றுடையானென்றலவோநம்பினேன் என்றலைவன். (௧௫௩௮)

புற்றுக்குரைத்ததுபோதிதத்புத்திமெயல்லாரு
சற்றுமதியாதாவிட்டேன்சண்டாளி யுற்றுமிந்த. (௧௫௩௯)

ஊரிலுள்ளபாவிகளுமுண்மையுணர்ந்தாரிலையே
யாருஞ்சத்ராதியெனக்காரே போராடிப். (௧௫௪௦)

பற்பலநாளென்கணவன்பல்லைக்கடித்தீந்த
சொற்பச்சாமானதிலுஞ்சோமாறி யற்பகலா. (௧௫௪௧)

யீயாயெறும்பாயிதுகாலந்தேடியதைப்
பேயாங்குகாத்திருந்தபெற்றிபோம் றேயாமற். (௧௫௪௨)

பையடக்கமாகப்பவுன்பவுனாய்வைத்திருந்த
கையடக்கமெல்லாங்கவிழ்த்தேனே வையமதிற். (௧௫௪௩)

நீதறவியார்பொருளைத்தீபார்கொள்வாரொனவு
நீதிமொழியென்னினிசமாச்சே காதலரே. (௧௫௪௪)

வேற்கையிலேபெரும்மாவிராணேபொருனேமுன்
மூர்க்கனவன்பொல்லாமுரடனே தோற்குமிதைக். (௧௫௪௫)

கேட்டாளேயாகிற்கிடுகிடுக்கவேமூணும்
போட்டுக்கடாவிப்புடைப்பானே மூட்டிவசை. (௧௫௪௬)

மாற்றமுறைப்பேசியெந்தன்வங்கிஷத்திலுள்ளவர்க்கு
மேற்றயட்டுமேற்றியிறக்குவனே தூற்றிமொத்தி. (௧௫௪௭)

வாயிலவனேர்ந்தபடிவைதாலும்வைதிடட்டும்
பாயிலிலென்னிட்டப்படுக்கானே நோயென்ப. (௧௫௪௮)

தெத்தனையுற்றாலுமருந்தேயுண்பதில்லையிச்சா
பத்தியத்துக்கல்லோபயந்துநா னித்யாதி. (௧௫௪௯)

பொன்னுக்குப்பொன்னிழந்துபோகசுகமிழந்திங்
கென்னத்துக்காய்நானிருக்கிறேன் அன்னன்றோ. (௧௫௫௦)

சுற்றத்தார்க்கிந்தேனேருழ்கருமமெல்தார
மற்றவர்க்கேதேனுமளித்தேனோ மற்றுமடன். (௧௫௫௧)

கோவில்குளமுண்டுபண்ணிக்கோடிபலன்பெற்றேனோ
பாவியிலும்பாவியெனப்பட்டேனே தீவினையே. (௧௫௨)

னென்செய்வேனென்செய்வேனென்றுருகிக்கன்றியவள்
பன்மூன்றுநாளாய்ப்பரிதவித்துப் பின்னிதனைக். (௧௫௩)

கொண்டவற்குச்சொல்லமனங்கூசிப்பயந்தமை
கண்டகனும்போலுங்கலங்கினளே மண்டலத்தி. (௧௫௪)

லிப்படியேமாதரெழிலார்ந்தமுற்பணியுங்
கைப்பொருளுந்தோற்றக்கழிந்தவரா யெப்பொழுதும். (௧௫௫)

பொற்பிழந்துசித்தப்புலனிழந்தங்கூணிழந்து
பற்பிளந்துகூவிப்பலருத்தனராம் சற்புருடர். (௧௫௬)

சீருயர்ந்தாரேனுந்திகழ்பணியிற்சிந்தையுண்டோ
நாரிகட்கேனிந்தநகைமயக்கம் நாரியர்கள். (௧௫௭)

நாணமடமச்சம்பயிர்ப்பென்னுநால்வகையாம்
பூணையணியாய்ப்புனைந்தனைப் பேணியுந்தன். (௧௫௮)

கற்பியல்வழாமற்கடிமனையைச்சுத்தமிட்டுப்
பொற்புடனேடோறும்புனலாடி யிற்புகுந்து. (௧௫௯)

சட்டரசவுண்டிதயாரித்தவர்களைவற்
இஷ்டமுடனூட்டலியல்பன்றிச் செட்டிகட்டான். (௧௬௦)

வீடேகெதியாய்மெனக்கெட்டலைந்துசுடு
காடேபோமட்டுங்கலன்கலனென் றூடவனை. (௧௬௧)

மோதும்பிடாரிகளைமுற்றுந்துறந்தவன
மீதுறையும்வாழ்க்கைமிகநன்றே தோதகஞ்செய். (௧௬௨)

மாதர்மனைமிதியேன்வாயுறவுஞ்செய்தறியேன்
காதலனைப்பேணுங்கவலையன்றி யாதுங். (௧௬௩)

குறியேன்கொடுங்கூற்றுயிர்கொண்டுபோம்போ
தனையன்றிவேறுதுணையாமோ இறைமையுணர்ந். (௧௬௪)

தில்லுக்கிசைந்தொழுகாளேற்றமிகுகூற்றமெனுஞ்
சொல்லுக்கிடம்பதித்திச்சோராமல் செல்லுக். (௧௬௫)

குமியேபோலாதாமுற்றும்மிதயமேற்கத்
தமியேனடாத்திவருந்தன்மை கமைசான்ற. (கரு சுசு)

சித்தமறிவீரிதுநாட்டிராக்குடும்பபா
ரத்தையும்மிலேற்றியமிழ்த்தாம லத்தனையும். (கருசுஎ)

யானேபொறுத்துநின்றேனல்லதுவேறும்மிடையா
தேனுமொருதொந்தரவுஞ்செய்திரோன் மாநிலத்தோர். (கருசுஅ)

சித்தமகிழ்ந்தியற்றுந்தீபாவளிப்பெருநா
ளித்தலத்தினுளேயிராவெய்தலா லத்தையிவர் (கருசுகூ)

மேனலஞ்செய்யாதுமிகச்சுருக்கிச்செய்தனமொன்
றீனமெவர்சொல்வர்நமதிஷ்டமே யானநின்று (கருஎ0)

லுள்ளதுகொண்டேபுரிகுவோமென்றிவளுரைக்க
வுள்ளமகிழ்ந்தன்னவனுமோதுவான் றுள்ளி. (கருஎக)

நரகாசுரன்மடிந்தநாளிற்பெருமான்
சரணம்புயமலரிற்றாழ்ந்து மரணமுறு. (கருஎஉ)

மிந்நாளைநன்னாளயெங்குங்கொண்டாடவரந்
தன்னாற்படைத்திருக்குந்தன்மையால் இன்னநல. (கருஎங)

மன்னுபுண்யகாலமருவுபலனைப்பெறநா
னென்னவகைசெய்வேனிளமயிலே பொன்னுடையார்.(கருஎச)

## நாயகன் நாயகிக்கு லேவாதேவி விஷயங்கூறல்.

தன்பாற்கடன்வாங்கித்தான்புரிவோமென்னிலது
வன்பாய்விளைந்துவருங்கெடுதி பொன்கேட்பாற். (கருஎரு)

கெவ்வளவுசொத்திருக்குமென்பதையாராய்ந்துநன்றாய்
யொவ்வியசொத்தாயிரத்துக்கோர்நூறே வவ்வுதற்குப். (கருஎசு)

போதுமெனக்கொண்டுமக்கிப்போதுதுகைநல்குதற்கிங்
கியாதுமிலையாகிலிருந்தாலும் ஓதுமொரு. (கருஎஎ)

நூற்றுக்குக்குன்றுதுனோக்கப்படிகொடுப்பேன்
ஏற்றமில்லைநாற்றுக்கிரண்டாயாம் போற்றுமதை. (கருஎஅ)

யாறுமாசக்கெடுவிலாய்ந்துசெலுத்தாதுவிடி
லூறில்கடன்பத்திரமுற்பத்திமுத லீறுவரை. (௫௭௯)

ஐந்துவட்டியாகவுமவ்வாறுமாத்தைக்கொருக்கால்
முந்தைமுதலோடுமுதலாக்கி யிந்தவித. (௫௮0)

மாச்செலுத்தவேண்டுமீதன்றிமறுபேச்சிலையென்
றார்ச்சிதமாய்ச்சொல்லவவனொப்பியே வாய்ச்சபடி. (௫௮௧)

பத்திரமுமீடுகண்டுபோய்க்காயிரிஜிஸ்தர்செய்து
மத்தொகையிற்கால்வாசியாமுசிதம் பத்திரத்தின். (௫௮௨)

கொள்கிரையம்நெட்டெழுத்துக்கூலிரிஜிஸ்தர்ச்செலவோ
டெள்ளரியசேவகர்க்கிளும்செலவு துள்ளுவண்டி. (௫௮௩)

வாடகைமற்றின்னசெலவாமென்றுந்தள்ளிமிச்சங்
கூடியதைக்கையிற்கொடுத்தபின்னோர் ... நீடிநாட். (௫௮௪)

கேளாதுவிட்டுக்கெணிதவட்டியேறுமட்டும்
வாளாவிருந்தவாயிதா நாளோர்ந்து. (௫௮௫)

சேர்ந்தமுதலத்தனைக்குஞ்சிவில்வழக்கிட்டுமிகத்
தேர்ந்தசெலவோடுமதைத்தீர்ப்பாக்கி யாந்தரங்க. (௫௮௬)

மாகச்சபுத்திவாரண்டுப்பியோனொடுதன்
பாகத்திருவர்களைப்பாலித்து வேகமுடன். (௫௮௭)

சென்றிடர்சித்திபெறச்செய்வீரென்றேவவவர்
பின்றிடவொன்றுவிழும்பேரிடிபோ லன்றுபுகும். (௫௮௮)

தாடுகளைமாடுகளையாஸ்திகளைவீடுநுழைந்
தோடியுப்புச்சட்டிவரையோடுமுதல் நீடுமனை. (௫௮௯)

காணிகளையாவுங்கவர்ந்துகுடியோட்டிவிட்டார்
கேணியவன்குடும்பங்கெட்டனவே நீணிலத்தி. (௫௯0)

லிப்படியேபல்லாரிவர்பாற்கடனேற்றுத்
துப்புரவாய்க்கெட்டார்சொலவரிதே ஒப்பரிய. (௫௯௧)

பானையப்பட்டுந்துரைகள்பால்வலியச்சென்றுசிலர்
நீனுமனேவர்த்திகழ்செலவுக் காள்வினையாய். (௫௯௨)

நாங்கள்தருவோமீக்குநல்குமுதலுக்குவட்டி
தாங்களென்னபோட்டாலுஞ்சம்மதமே யோங்குபணம். (௧௫௯௩)

காசுபெரிதல்லக்கனமுள்ளதங்கள்சித்த
நேசமதேகோடிநிதியாகும் வீசுமுதல். (௧௫௯௪)

நூற்றுக்கணாவீதம்நோட்டெழுதித்தந்திடில்யா
மேற்றமிருந்ததுகையீகுவேம் தோற்றமுள்ள. (௧௫௯௫)

மாமதுரைசென்னைமருவும்பினாங்கிரங்கோன்
பாமருவுபம்மையுயர்பங்காளம் க்ஷேமமிகு. (௧௫௯௬)

நாகப்பூர்சிங்கப்பூர்நாகைதிருநெல்வேலி
வாகொப்புகொச்சிமலையாளம் மாகொழும்பு. (௧௫௯௭)

தில்லிஐதிராபாத்துசித்தூர்கடப்பைமுத
லெல்லுலவுதேசமெல்லாமெம்புறக்கந் தொல்லுலகி. (௧௫௯௮)

லெவ்விடத்துக்காணுலும்யாங்கள்தருமுண்டியலே
யவ்விடமெல்லாஞ்செல்லுமாகையாற் செவ்வியநற். (௧௫௯௯)

சித்தம்போல்யாங்கள்திறம்பாதொழுகுவமென்
றெத்தியிவர்சொல்லுமிழுக்குரையை நத்திநித. (௧௬௦௦)

மல்காமற்சொற்பசொற்பமாகத்தொகைவாங்கிப்
பல்காலும்நோட்டெழுதிப்பாவிக்கப் பில்குசிறு. (௧௬௦௧)

தூறல்பெருவெள்ளமெனத்தொக்கிப்படர்ந்தனபோ
லூறிலக்ஷலக்ஷமாயோங்கினவே மாறியிவ. (௧௬௦௨)

ரீட்டுதுலைவட்டியிரண்டரைதிப்போதுறலாற்
காட்டுமெரைவட்டியினிக்கட்டாது நோட்டுகளை. (௧௬௦௩)

யொன்றாய்த்திரட்டியொரேபத்திரமாக்கிப்
பொன்றாதிரண்டேனும்போடுங்கள் துன்றுவள. (௧௬௦௪)

மேந்துசமுத்திரத்துக்கேறல்குறைவில்லெனபோல்
வேந்தர்களுக்கீதோர்விஷயமா ஆய்ந்துசித்தம். (௧௬௦௫)

மாமகிழ்ச்சிகூர்ந்துமறுபத்திரமெழுதித்
தாமதமில்லாதுதருகிரெனப் மாமுகமும். (௧௬௦௬)

நீள்சிலேப்பேனுங்மின்டிக்கறிப்பனபோற்
றுளிலர்விடாமற்றொடர்ந்துபற்றக் கேளிரென. (கசு0எ)

விண்ணவர்கணம்பாலியம்பிநின்றகட்டுரையும்
பின்னதற்குமாறுபட்டபேதகமுந் தன்னுளக்கிற். (கசு0அ)

கண்டுணர்ந்துமற்றிவர்சங்காத்தமினிப்போதுமெனக்
கொண்டெழுகால்வாட்டிகுறிப்பிட்டுத் தண்டமிழிற். (கசு0கூ)

தீர்க்கமுடையான்சிவகங்கைவாழ்திசுலா
மார்க்கமதினின்றவரன்முறையான் கார்க்கடல்சூழ். (கசுக0)

வையம்புகழுமகம்மதிசுமால்நெடுநாட்
செய்யுந்தவத்தில்வந்தசீராளன் தூய்யநெறிச். (கசுகக)

செல்வத்துரைத்தனத்தார்செய்தசட்டம்லாக்கள்முற்றுஞ்
சுல்பிற்பொதிந்தகளஞ்சியவான் பல்குபல. (கசுகஉ)

பத்திரங்கள்சாசனங்கள்யாகசுவிகாரமுயில்
எத்தனையோலாவுக்கிசைந்தபடி சித்தமொத்து. (கசுகங)

முற்றீட்டலேயசலாய்முன்னிமுடிக்குந்திறவான்
சுற்றீட்டமேவுந்தொடர்பினன் கொற்றமிகு. (கசுகச)

மன்னவர்கொண்டாடுமதாருசிக்கந்தரெனு
மின்னிசையான்றன்னையினிதழைத்தே யன்னவனும். (கசுகரு)

பத்திரமுந்தீட்டிப்பயில்ரிஜிஸ்தர்செய்துநல்கச்
சித்திபெற்றேமென்னுஞ்செழிப்புளராய் தத்தமூர். (கசுகசு)

சென்றாரிருந்தார்செலும்வாயிதாப்படுமுன்
மன்மேறிக்கோர்ட்டில்வழக்கிட்டே வென்றபெரு. (கசுகஎ)

மான்களென்றுமெண்ணுமல்வன்ஜபுத்திக்கட்டளைகொண்
டாங்குபுகுந்தேறியரண்மனையைப் பாங்கொடுசூழ்ந். (கசுகஅ)

தேற்றவிலேபெற்றபொருள்யாவுங்கவர்ந்துகொடுங்
கூற்றமெனக்கோர்ட்டிற்கொடுபோகி மாற்றலின்றி. (கசுககூ)

பின்னிதவேலத்தில்விட்டும்பெட்டுபுறஜமீன்சிலதைச்
சின்னபின்னமாக்கிச்சிதறிவிட்டா ரின்னவர்கள். (கசுஉ0)

புன்மையுலகத்தவாமேற்புல்லுருவியென்றறிந்தும்
நன்மதியுண்டாவதொருநாளுமில்லை மென்சிறையாட். (௧௬௨௧)

## முதலாளியைவஞ்சித்து கடன்வாங்குதல்.

காட்டிகலையாதுமுட்டைதானெடுப்பான்காற்செருப்பை
மீட்டொருவன்றான்கவர்ந்தவிந்தைபோல் நாட்டவரை. (௧௬௨௨)

யெத்திமுதல்சேர்த்தவனையெத்தத்துணிந்துகடுஞ்
சித்தனொருவன்சிறந்தசெல்வனெப்பாய்த் தத்திமிகத். (௧௬௨௩)

தூண்டுபரியேறிச்சுடர்வேகட்டாணிகள்
பூண்டிருவரேவல்புரிந்துவர வீண்டிமுத. (௧௬௨௪)

லாளிதனைக்கண்ணுற்றளாவிப்புகழ்ந்துமையிற்
நாளிலுறவுற்றதுநற்றவமே கேளுநமக். (௧௬௨௫)

காஸ்தியளவிலையாளுலுமிதுநற்சமையம்
பூஸ்திதியாங்கொள்ளும்பொருட்டுற்றோம் தீர்த்தபதி. (௧௬௨௬)

ளுயரத்திற்பாதிநம்பாலானமற்றப்பாதியைநீ
ரீயுமுசிதங்கால்சேர்த்தெண்ணம்போ லாயவட்டி. (௧௬௨௭)

கூட்டியொரேமொத்தங்குறித்ததினத்தினம
தாட்டலைவர்தன்பாலனுப்புவோம் மீட்டுகெடுத். (௧௬௨௮)

தாண்டிஞுற்பத்ரஞ்சனித்தமுதலுடையார்
வேண்டும்போதைந்துவட்டிவீதமா யாண்டுதொறும். (௧௬௨௯)

வட்டிக்குவட்டியிட்டுவாஜீபியாய்ச்செலுத்தக்
கட்டுப்பாடுற்றோங்கருத்திலெனப் பொட்டிமகன். (௧௬௩0)

வீசங்காசேனும்விடாமேலழுத்தமுள்ளவனை
யாசையெனும்பம்பரத்திலாட்டியே மாசுழன்று. (௧௬௩௧)

மக்குப்பிடித்திருக்கமாயமென்னசெய்தானோ
சொக்குப்பொடிமருந்தைத்தூவினனோ சிக்கிமுழுக். (௧௬௩௨)

கல்லானநெஞ்சுங்கரைந்துமெழுகாயுருகிப்
பொல்லாதகாலப்புணர்ப்பினு லொல்கியவன். (௧௬௩௩)

சொத்தொன்றும்பாராமற்றொல்லீடுங்காட்டாமற்
பத்திரமுந்தீட்டிப்பணமீய வித்தொகையிற். (௧௬௩௪)

கால்நஷ்டியாமெனக்குக்கைமேலுமக்கிதில்முக்
கால்நஷ்டியாமென்வுங்கைகாட்டி மேலுமினி. (௧௬௩௫)

யுன்னாலியன்றதுபாரோகோவெனவுளத்துற்
றன்னூரார்புக்கானகமகிழ்ந்தே பின்னரிழி. (௧௬௩௬)

வானகெடுகுதுவிளையாட்டல்விலைமாதர்மது
பானமதில்மூழ்கிப்பணமுழுதுந் தானிழந்து. (௧௬௩௭)

வீணாளாயுற்றவனைமிக்கமுதலாளிதினம்
வீணாளாயுற்றுவெறிதலைந்து நாணமுறக். (௧௬௩௮)

கெஞ்சியடிக்கடிபோய்க்கேட்டவுடனேயவனும்
வெஞ்சமுறச்சீறிவெகுமிடுக்காய் வஞ்சகநீ. (௧௬௩௯)

## முதலாளியைத்தூஷணமாய்த் திட்டுதல்.

யெப்பத்தொகைகொடுத்தாயேதுமுழுமோசமிது
பொய்ப்பத்திரமோபுதிப்பித்தாய் தப்பிலியென். (௧௬௪0)

கையெழுத்தேபோலுமிதுகற்பனைபாரிப்படியா
வையகத்தையெத்திமயக்கினாய் செய்திடுமிப். (௧௬௪௧)

போர்ஜரியின்குற்றமிதேபோதுமுன்னைவேலெசில்விடேன்
வேர்வொழுமாட்டிவிலங்கிட்டுச் சார்ஜ்பண்ணித். ௧௬௪௨

தீட்டியோரேழ்வருடங்தெண்டிப்பேன்ட்யாம்பகர்நம்
வீட்டுளேன்வந்தாய்வெளியேநில் கோட்டுக்குப். (௧௬௪௩)

போய்வழக்குச்செய்வையங்குப்போந்துநெஞ்சையீர்ந்துனது
வாயில்மண்ணைப்போட்டுவருகிறேன் றேயமதிற். (௧௬௪௪)

செங்கோற்றுரைத்தனத்தார்செய்தசட்டதிட்டமெலா
மங்கோர்ந்தேன்முற்றுமவதானம் இங்லீஷிற். (௧௬௪௫)

பீயேபீயல்முதலாய்ப்பேர்பெரியதேர்ச்சியுற்றி
ராயபகதுரொனும்பேரெய்தினேன் நேயமுள்ள. (௧௬௪௬)

லாயர்களென்பாலணுகிலாப்பயின்டின்றும்பரியத்
தாயபொருடேர்ந்தனர்களாதலால் நீயோ. (௧௯௪௭)

விழுக்குடையசுத்தமுட்டாளென்னுடன்வாதித்து
வழக்கைச்செயிக்கவோவல்லாய் பழக்கத்தா. (௧௯௪௮)

லின்னபாரிஸ்டருனக்கேற்பட்டுவந்தாலுஞ்
சின்னபின்னமாக்கியதைச்சேதிப்பே னிந்நிலத்தில் (௧௯௪௯)

முந்தியதாம்பூலமுதல்நிம்மரென்றாலகி
லெந்திறமைநீகேட்டதில்லையோ யிந்தவித்தை. (௧௯௫௦)

யெங்கேபடித்தாயெவருனக்குப்புத்திசொன்ன
ரங்கேபோய்ச்செய்வாயதுபலிக்கும் வெங்கொல்லர். (௧௯௫௧)

வீதிதனிலாசிவிலைவிற்றல்விலைப்போமோ
யேதென்னைநீமற்றவர்போலெண்ணியோ சோதித்தா. (௧௯௫௨)

யப்படியாசெய்திநல்லதாகட்டும்பார்சமத்தைத்
தப்படியிம்மட்டாசதிமோசங் *கப்படியாம் (௧௯௫௩)

கொட்டினற்றேளின்குணமறிவாரிக்கலியிற்
கட்டளைசேர்நல்லதற்குக்காலமில்லை துட்டர்மித்ர. (௧௯௫௪)

பேதத்தாலுன்மதியைப்பேதிக்கச்சூதுவித்தை
போதித்தார்தம்மைப்புகன்றிடா யேதவனைச். (௧௯௫௫)

சும்மாவிடேன்வலுவிற்றாண்டில்மீனைப்பவிழுத்
தம்மாவென்றேங்கியலறியழப் பம்முதலா. (௧௯௫௬)

யேவுதற்குற்றத்திற்கிருகால்விலங்க டியா
தேவிடிலென்றீரமிருந்தென்னபயன் மாவலியா. (௧௯௫௭)

ரெல்லோருமென்றேடெதிர்த்துமுடியாதுகடற்
கல்லோலமென்னக்கலக்கமுற்றார் வெல்லுமெனப். (௧௯௫௮)

† பாறொருத்தன்மேற்பாயும்பான்மையெனவந்தாய்நீ
வேறொருத்தனல்விடுவேனோ தேறவுநீ. (௧௯௫௯)

---

* கப்படி-கொடுக்கு. † பாறு-பருந்து. ஒருத்தல்-யானை.

யற்பனமக்கீடிலனென்றந்தோதயவுவைத்து
வற்புறுத்தல்பண்ணுதுமன்னித்தேன் சற்பனையாய். (கசுசுO)

தொட்டிலையுமாட்டித்துடையினிலுங்கிள்ளுகின்ற
பட்டிமக்களுரிற்பலருளரால் கெட்டவர்கள். (கசுசுக)

சொல்வார்த்தைகேட்டுச்சுகமிழந்துபோகாதே
நல்வார்த்தையாகுமென்சொல்நம்புவாய் செல்போதக. (கசுசுஉ)

கையிருப்பையார்க்குங்கடனுடன்கொடாமலினிப்
பையிருப்பிற்கட்டிப்பதுக்குவாய் பொய்யிலையான். (கசுசுங)

செப்பியநன்மார்க்கந்தெரிந்தனையோ நீயிங்கு
கப்புச்சிப்பென்றுசத்தங்காட்டாம லப்புறம்போ. (கசுசுச)

வென்றுபலவாறுமெடுத்தேறிப்பேசமனங்
கன்றிமுதலாளியிருகாணநிங்க நின்றுநகி. (கசுசுரு)

## முதலாளிமனம் வருந்துதல்.

எண்ணுதுமெண்ணியினைந்திப்பொருளைக்கூட்டுதற்குப்
பண்ணுதசெட்டுகளைப்பண்ணிமனம் புண்ணாய். (கசுசுசு)

துலைதூரதேசமெல்லாஞ்சுற்றித்திரிந்தக
லைவாய்க்கடம்குளமிழந்திப் பலதொல்லைப் (கசுசுஎ)

பட்டேனுழன்றேன்பரதவிக்கப்பெண்டிர்பிள்ளை
விட்டேனலைந்தேன்மெலிந்துநான் கஷ்டமுடை. (கசுசுஅ)

னுண்ணுதிரவலர்வந்தாலெனன்றுற்குட்டியிட்ட
பெண்ணைப்போற்சீறிப்பிதற்றியே மண்ணனிற. (கசுசுகூ)

படைத்தமுதலையிந்தப்பாவிதனக்கேயொப்
படைத்துமுதலைனொந்தேனந்தோ இடைக்கரிய. (கசுஎO)

இஷ்டரனைவட்டிக்கங்கியுமெனக்கேட்டவர்க்கா
கட்டுமென்றுநாளைக்கடத்தியே ‡ தட்டல்வட்டிப். (கசுஎக)

பேராசைபூண்டுபெருத்ததொகையிழந்த
சீராளனென்போற்றெளிந்துளரார் பார்மீது. (கசுஎஉ)

---

‡ தட்டல்-ஐந்து

நீதவட்டிக்கியாத நீதவட்டிக்கிந்தமுத
லாதல்போற்றேன் றியழியுமென வேதநூ. (கசுஎங)

லாய்ந்திருந்துமாசைக்களவில்லையென்பனபோ
லோய்ந்துமதிகெட்டேனுணங்கினேன் வாய்ந்தவிநம் (கசுஎச)

## முதலாளி தெய்வபிரார்த்தனை பண்ணல்

பிந்திரனீடேறவெழுபாரமமீறக்
கொந்தளிக்குமன்பர் குறைதீர வந்துதித்த. (கசுஎரு)

பன்னிருகைவேலா பழிக்கஞ்சுங்தேவேயீ
னன்னவிழியாய்கூடலம்பிகாய் முன்னே. (கசுஎசு)

வடங்காரலைத்துயிலுமாலேசீரிந்தக்
கடன்காரனெஞ்சைக்கரைத்துக் கொடுஞ்சனியன். (கசுஎஎ

வட்டியொன்றும்வேண்டாமுன்வாரிக்கொடுத்தமுதல்
மட்டும்வந்தாற்போதும்வழக்கிலையே நஷ்டந்தாற். (கசுஎஅ)

* தேவிக்கையும்திடுமென்செங்கைவசமாக்குதிரேல்
நாலத்தோர்பங்குமக்குநல்குவேன் மேலுற்ற. (கசுஎகூ)

பொன்னுபரணம்புயங்காபரணமுடன்
சொன்னபிஷேகமிட்டுச்சூட்டுவேன் முன்னோர்ந்த (கசுஅ0)

காணிக்கைக்கெல்லாங்கணக்கிட்டுவட்டியுடன்
பேணிச்செலுத்திப்பெருக்குவேன் வேணியினில. (கசுஅக)

திங்களணிமாரியற்குத்திட்டிக்கிடாயும்வெட்டிப்
பொங்கலிட்டுங்கோவிற்புதுக்குவே னெங்குடியைக். (கசுஅஉ)

## முதலாளி கோர்ட்டில் வழக்கிடுதல்

காப்பாற்றுமென்றுகனதெய்வம்போற்றியுயர்
தாப்பானநாயஸ்தலம்புகுந்து தீர்ப்பாக்குந். (கசுஅங)

சாரந்தெரிந்தவக்கீல்தம்மையடுத்துண்மையிலோர்
வாரமதிற்கோட்டில்வழக்கிட்ட னேர்பிரதி.(கசுஅச)

---

* தேவிக்கை-கணக்குறைவு

வாதிக்கறிக்கைமுந்திவந்ததுகண்டேங்கியிதற்
கேதுசெய்வோமென்றிவனுமெண்ணியே சூதுங். (கசுஅரு)

## பிரதிவாதி சாக்ஷியேற்படுத்தல்.

இருட்டுமுருட்டுமிகத்தோந்தகசவஞ்சப்
பிரட்டரிட்டமுத்துப்பேசி மிரட்டுமிதி. (கசுஅசு)

லென்றரப்புச்சாக்ஷிகளாயெண்ணியுமைக்கோருகிறேன்
றன்றிறமையோடிதுபோற்சாற்றுவீர் முன்பவர்கள். (கசுஅஎ)

கற்பனையாயிப்பத்திரங்கணிந்ததேதியினி
லப்பீல்விஷயமொன்றையாலோசித் திப்பிரதி. (கசுஅஅ)

வாதியுடன்யாங்கள்சென்னைவைகியதெதார்த்தமந்த
வீதியிலுள்ளார்க்கும்விசிதமா மோதுமிவன். (கசுஅகூ)

பொன்னுடையானல்லபுகழ்நீரசத்கமுள்ளான்
பன்னுமறமுள்ளான்படிறுள்ளாயான் இன்ன. (கசுகூ௦)

கடன்வாங்கலுண்மையென்றுங்கட்டுப்பாடானை
படுமோசத்தாலியற்றும்பண்பே யுடையதென. (கசுகூக)

நீவிரிருவருந்தானிச்சயமாயச்சமற்றங்
கேவறாநற்சாக்ஷியியம்புவீர் சீவில்முன்னைம். (கசுகூஉ)

பூதத்துக்கொல்காமற்பொய்யையொரேமொழியாய்ச்
சாதித்தாலெவ்வழக்குந்தள்ளலாஞ் சூதுற்ற. (கசுகூங)

வாதிலக்கீலும்மைமருள்படக்கிராசுபண்ணிப்
பேதிக்கச்செய்துபிரட்டுவான் போதிலுளங். (கசுகூச)

கன்றியுணர்ச்சிகெட்டுக்கைமறந்துமெய்மறந்தங்
கொன்றுகிடககொன்றையுளறிவிட்டு நின்று (கசுகூரு)

விழியாதீர்மெத்தவிழிப்பாய்நான்சொன்ன
மொழிபோலுஞ்சாக்ஷிமொழிவீர் வழுவிதென. (கசுகூசு)

கூரஞ்சவேண்டாம்புகழ்சீமைலாயர்களை
யீரங்கிபேசவிழுக்கிறேன் நேரே. (கசுகூஎ)

மறுவாதிவக்கீல்தனக்கும்வாய்பூசி
மதுசரித்துக்கொள்வோமடக்கி மலகார. (கசுகூஅ)

வாஸ்தவமாயுந்தமக்கோர்மாசெய்தாதெய்திறுமென்
ஞஸ்திமுற்றும்பாராதழித்திடுவேன் றாத்தேரி. கசுகூகூ)

யாட்டுமுடங்தனக்கோராளைப்பலிகொடுப்பேன்
வாட்டமினியேனுமருளாதீர் கேட்டீரா. (கஎ00)

யிவ்வழக்கைப்பற்றிநமக்கிஷ்டரோடுபேசியகால்
மைவளைக்கைமாதர்மருணீங்க மெய்வளர்த்து. (கஎ0க)

## சாக்ஷிகளுக்கு குலதெய்வம்வந்து சொன்னதாய்

## தயிரியங்கூறல்.

நம்புகுலதெய்வமின்றுநாடியருள்கூர்ந்தெனது
தம்பிதுரைச்சாமிதன்மேற்சன்னதமாய்த் தும்பிகொட்டி. (கஎ0உ)

மூதண்டமாயிறங்கிமோதியெனைப்பார்த்துறுமித்
தீதண்டுஞ்செய்கைதெரிந்தாயா நீதம்பி. (கஎ0௩)

யேண்டாயெனைமறந்தாயித்தனையுஞ்செய்தவனுன்
தாண்டாயென்பூசைதவிர்ப்பனவோ மூண்டவுன்பங். (கஎ0ச)

காளியுடன்சண்டையிட்டஞ்சாறுண்டளவுமென்னை
யேளிதமாய்த்தேடாதிருந்துவிட்டாய் நீளியவுன். (கஎ0ரு)

முன்னவர்கள்பூசைமுறைதவறுதெஞ்ஞான்றும்
நன்னயமாய்க்கொண்டாடிநண்புற்று ரன்னவர்கள். (கஎ0சு)

பூமியினிலிட்டவித்தும்பொன்னுய்விளையவிஷ்ட
காமியங்களெல்லாங்கதித்தோங்க மாமகிழ்ச்சி. (கஎ0எ)

யாயவர்க்குநானேயருகிருந்துவேண்டியசக
காயமுறச்செய்துகாப்பாடிவந்தேன் நீயொருத்தன். (கஎ0அ)

நல்லகுடிக்குநடுநாயகம்போலுஞ்
செல்லமகன்வந்துசெனித்திட்டாய். தொல்லுலகிற். (கஎ0கூ)

றெய்வமிகமேலாலயந்தொழுகைசெய்யாநன்றென்
றவ்வைநால்கற்றுமலைக்கழித்தாய் கவ்வையினல். (கஎக0)

கைந்தவுனக்கின்றுவரும்நாளைவரும்புத்தியென்று
புத்தியில்நாளும்பொறுத்திருந்தேன் வந்துவந்து. (கஎகக)

பண்ணுட்கனவிற்பகர்ந்துமிகழ்ந்தாயினிமே
லெண்ணுற்பொறுக்கவியலாது தன்னகத்தால். (கஎகஉ)

விஞ்சுசுடர்கான்றிடுதன்வீட்டுவிளக்கென்றுமுத்தங்
கொஞ்சிடிற்சுடாமற்குளிருமோ நெஞ்சினிலன். (களகங)

புற்றவனியாளுமுள்ளறிவுகாட்டிவைத்தேன்
மற்றுனக்கிப்போதுபுத்திவந்தனவா முற்றும். (களகச)

பொறுத்தேன்பிழையனைத்தும்புண்படவுன்சிந்தை
வெறுத்துக்கவலைகொள்ளவேண்டா முறுக்கித். (களகரு)

துயர்ந்தயெதிரிதனைத்தோற்கடித்துன்பக்ஷம்
ஜெயந்தந்தேனென்றுகரந்தீட்டி நயந்திடவென். (களகசு)

கைமேலடித்துன்கருத்துநிறைவேறியபின்
ஐயப்படாமலெந்தனுலயத்தில் மெய்யாய்நீ. (களகஎ)

சொல்லியசொற்போலுந்துலங்கியபூங்கப்பரையாம்
நல்லபெரும்பூசைநடத்துவையென் றெல்லவர்க்கும். (களகஅ)

நின்றுபரிபூரணமாய்நேர்ந்தபலகேள்விசொல்லி
யன்றுமலையேறியமர்ந்ததே நன்றுருடறங். (களககூ)

காதுகலிகாலமிதிற்கண்கண்டதெய்வமிதைக்
கோதுகுறைசொன்னூர்குடிகெடுமே ஓதிலெங்கள். (களஉ0)

தெய்வத்தைப்போலுமொருதேவுண்டோவாய்திறந்தாற்
கைமேற்பலிக்குமெந்தக்காரியமும் உய்தவினிப். (களஉக)

பெற்றேன்பயமொழிந்தேன்பேச்சுப்போலுந்தமக்குச்
சொற்றவுருவண்ணந்தொகைகொடுப்பேன் முற்றறிந்து. (களஉஉ)

பாருமெனச்சொல்லியவப்பாசாங்குப்பேச்சைநம்பி
சேர்பட்டாரிந்தநிருமூடர் கோருமிரு. (களஉங)

## சாக்ஷிகளிலொருவன் கூடாதெனல்.

சாக்ஷிகளிலேயொருவன்தந்திப்பாணிதில்நமக்
கேச்சுவருமன்றிநலமெய்தாதே வீச்சனபொய்ச். (களஉச)

சாக்ஷியுரைத்தோரும்லஞ்சந்தான்வாங்கினோருமந்த
மாச்செயிவிலாகுமுக்கால்வாசிப்பேர் சீச்சியவன். (களஉரு)

ஆயிரந்தந்தாலுமொப்பலாகாதேயொப்பிடில்நம்
வாயிலேமண்விழுந்துமானம்போந் தாயமனு. (களஉசு)

நீதியிற்கோரட்டார்நியாயவதிகாரிகளென்
றோதிவித்தலோகமெல்லாமோசையாய்ச் சூதுகொண்டு. (௧௭௨௭)

தப்புப்பிரியாதுபண்ணல்தஸ்தவேசுப்பிரட்டுச்
செப்பருபொய்ச்சாக்ஷிதிருட்டுநடை கைப்படுத்து. (௧௭௨௮)

நம்பிக்கைமோசமனநாணுவிபசாரங்
கும்பிட்டகொள்ளைகொலைமுதலாம் வம்புகளைத். (௧௭௨௯)

தீர்க்கவிசாரித்துத்தெளிவாயவரவர்க்குத்
தாக்குகுற்றங்கண்டுதகும்தபடி தூக்குடனே. (௧௭௩0)

பங்கோற்பயிண்டுபெருவிலங்குமாட்டியிரு
செங்கால்தளரச்சிறைப்படுத்தல் பங்கவப. (௧௭௩௧)

ராதந்தனைவிதித்தல்நாட்டுகின்றவம்பினிலே
வேதனையாய்க்கட்டிமிகவடித்தல் ஈதான. (௧௭௩௨)

தெண்டனைகளெல்லாந்திரணபக்ஷபாதமின்றிக்
கண்டினைகள்செய்யுமிந்தக்காலத்தில் கொண்ட. (௧௭௩௩)

பொருட்காசைபூண்டுநாம்பொய்சொன்னாலென்ன
திருக்காய்வருமோதெரியோம் தருக்கமிம்ம். (௧௭௩௪)

நாளைக்கோரட்டினிலேநம்மைப்பிடித்தபொல்லா
வேளையென்னவந்துவிடியுமோ கோளெனவும். (௧௭௩௫)

## மறுத்துஞ் சம்மதித்தல்.

விம்மியுளைக்தான்மறுத்துமிக்கபணத்தாசையினால்
மமமரடைந்துமதிகேடாய்ச் சம்மதித்துக். (௧௭௩௬)

கோரட்டுவாயற்குறுகியுபயகட்சிக்
காரர்களுமெய்தியங்குகாத்திருக்கப் பார்புரக்கும். (௧௭௩௭)

## கோர்ட்டார் தீர்மானம்.

வல்லகோரட்டார்மனுவுபயவாதிகள்தன்
சொல்லுரையும்பத்திரத்தின்சூழ்ச்சியையும் நல்குபல. (௧௭௩௮)

சாக்ஷிகளின்வாய்மொழியுஞ்சாராமிசைந்தனவெல்லாம்
ஊர்ச்சிதமாயாலோசித்துண்மைதனை மாட்சிமையோ. (௧௭௩௯)

டாய்ந்துவாதிக்கேயனுகூலத்திர்ப்புரைத்து
மாந்துமெதிர்வாதிகுற்றமன்னித்தே யேந்துமா. (௧௭௪௦)

சாட்சியர்முன்னைச்சமின்றியப்பிரமாணம்புகன்ற
சாட்சிகளாம்ரெண்டுதடியருக்கும் மாய்ச்சலுறக். (௧௭௪௧)

கோரவிலங்கிட்டுக்கொழுத்தகலைமண்சுமக்கத்
தீர்மானமேழ்வருடஞ்செய்தனரே நேரிலினைநக். (௧௭௪௨)

## தெண்டனைபெற்ற சாக்ஷிகள் வருந்தல்.

கேட்டவுடனன்னோர்கெடியாலிடியடர்த்து
வீட்டுதருவெனவும்வீழ்ந்தலறி மீட்டுமொரு. (௧௭௪௩)

வர்க்கொருவர்தன்கழுத்தைவாவிப்பிடித்தினைய
சொற்கள்பலபன்னித்துடித்தழுவார் தற்குணத்தால். (௧௭௪௪)

முன்னாலேகெட்டவர்கள்மூவரென்றுசொல்வர்கள்நாம்
தன்னாலேகெட்டோஞ்சதைக்கொழுப்பால் நன்மனையாள் (௧௭௪௫)

போகாதேபோகாதேபொல்லாதஜாட்சியென்று
சாகுருவிபோலுங்கடுத்தாளே ஆகெடுவான். (௧௭௪௬)

மல்லாரிபெற்றமகன்மாய்த்துக்குள்ளாகி
யெல்லாநலமுமிழந்தோமே செல்லமகன். (௧௭௪௭)

நம்பிதுரைச்சாமிதன்மேற்சாமிவந்துதாம்பயலை
மொய்ம்புறக்கோபித்துமுறுகினதாம் பின்புமுனக். (௧௭௪௮)

கேஜெயமுண்டாக்குவனென்றேற்கவலக்கைகொடுத்துப்
பூஜையப்பாற்போடென்றும்போயினதாம் தோசியவன். (௧௭௪௯)

எத்தனையோதந்திரமாயேமாத்திநம்மிருவர்
புத்திமயக்கமுறப்போதித்தே யெத்திமெல்லக். (௧௭௫௦)

கொண்டுவந்துமாட்டிக்குடியைக்கெடுத்துநம்மைத்
தெண்டனைக்காளாகவிட்டான்சிற்றப்பா பண்டைநல. (௧௭௫௧)

மெண்ணுமடையனுனக்கேதேனுந்தந்தானோ
கண்ணானைகானறியேன்காற்காசு மண்ணுவான். (௧௭௫௨)

வாயாலேயேய்த்துவகைமடிப்புச்செய்துவெறி
நாயாயலைந்துகலியவிட்டான் னுயாமல். (௧௭௫௩)

நாடியிவன்சொல்மொழியைநம்பாதேநம்புவதிற்
கேடுவருமென்றேனீகேட்டிலையே நீடுமக்கோர். (௧௭௫௪)

தாழ்வுவரிலாஸ்திமுற்றுஞ்சாதிப்பேனென்றுரைத்த
பாழுறுவானெங்கோபறந்துவிட்டான் வாழ்வுகந்து. (௧௭௫௫)

போ.ஸில்லெயிற்பட்டறியோம்வேலையொன்றுஞ்செய்தறியோம்
எல்லைநலத்தோடிருந்தோமென்செய்வோம் காலில்விலங் ()

கிட்டொருவன்வன்ஜெயிலிலேவுபலகஷ்டமுற்றும்
பட்டுவந்தோன்சொன்னான்படிப்படியாய்க் கட்டைவெட்டச் ()

சொல்வாராஞ்சாடிமுக்கச்சொல்வாராஞ்செக்கிழுக்கச்
சொல்வாராமண்சுமக்கச்சொல்வாராம் பல்வேலை. (௧௭௫௮)

செய்துமுடித்துஞ்சிறிதுசெய்யமுடியாதுவிடில்
வைதுவெய்யிற்போட்டுவதக்குவராம் ஐயையோ. (௧௭௫௯)

காலாலுதைப்பாராங்கையாலிடிப்பாராங்
கோலால்நற்பூசைகொடுப்பாராம் ஓவிடவெங். (௧௭௬0)

காவல்வசப்பட்டுக்கழிவதினுமச்செயிலின்
சேவகர்நிர்ப்பந்தமோசெப்பரிதாம் தாவன்னம். (௧௭௬௧)

கிஞ்சித்துங்கிட்டாதாங்கேப்பைச்சுடுகளியாம்
பஞ்சொத்தகாற்கிரட்டைப்பாடகமாம் அஞ்சுற்ற. ' ௧௭௬௨)

இன்னவிதமாஞ்ஜெயிலேழ்வருடமுந்தரித்தங்
கென்னவிதமாகவுமீடேறுவோம் அன்னமய. (௧௭௬௩)

ஊணிழந்துபேணுமுடைவிழந்துநெஞ்சநிறை
பேணிழந்துகீர்த்தியிழந்தாலும் நாணிழந்து. (௧௭௬௪)

தன்னீர்க்கலசமொன்றுதாங்கியுயிர்கொண்டுலவல்
நன்னீர்மைத்[illegible]ரோநடைப்பிணமே முன்னேற்று. (௧௭௬௫)

தென்னபவஞ்செய்தனமோயேழ்வருடமுந்தொலைந்த
பின்னலவோபெண்சாதிபிள்ளைமுகந் தன்னைநாம். (௧௭௬௬)

காணுவமோவல்லகடவுள்செயலெப்படியோ
நீணிலத்திலாயுளென்னநிச்சயமா வீணன்முழுப். (௧௭௬௭)

பாவியிலுஞ்சண்டாளப்பாவிநமக்கெங்கிருந்தான்
தாவியட்டமத்துச்சனிபோலே தேவியுடன். (௧௭௬௮)

பக்கஞநின்றேங்கிமயங்குவரோநம்பனைகவர்
கெக்கலிகொட்டிப்புரிவர்கேளிக்கை யக்கோவென் (௧௱௬௰௯)

றையநெடுஞ்சிங்கையராயாண்டுவிலங்கிட்டவர்கள்
தெய்வமனைத்தொநொந்துசெயலழிந்தார் பொய்யனெனும். (௧௱௭௰)

## பிர்திவாதிஞர்க்குச்சென்றுசொத்துகளை மறைத்தல்.

அப்பிரதிவாதியயர்ந்துநான்தெண்டனைக்குத்
தப்பினதேமுன்னோர்கள்தர்மமென்றும் வெப்புறவே. (௧௱௭௰௧)

சாறிவரும்போதுகண்டோர்தான்வினவுங்காலையிவன்
பாறுறவோர்போக்காய்வழுத்துவான் தேறவக்கீல். (௧௱௭௰௨)

சாக்ஷிகளுக்கெவ்வளவோசாதனையைப்பற்பலகால்
சூட்சமறசொல்லிக்கொடுத்திருந்தும் பேச்சைமறந் (௧௱௭௰௩)

தீரங்கிக்காலத்திலெக்கசக்கமாயுளறிப்
டாரெங்குந்தூற்றப்பழியடைந்தார் பேர்மங்கிக். (௧௱௭௰௪)

கொட்டாரெனையுங்கொடுத்தார்கடுஞ்சூழலிற்
பட்டாழ்கலம்போற்பயனிழந்தேன் கெட்டியாய். (௧௱௭௰௫)

ஆனைவால்பற்றினவராறுகடந்துய்வர்சிறு
பூனைவால்பற்றினவர்போலானேன் ஆனாலும். (௧௱௭௰௬)

கோரட்டார்செய்தகொடுமைகொடுமைதிரி
யூரட்டார்செய்கைவலியூழென்றும் கோரட்டார். (௧௱௭௰௭)

மீதிலதிகோபமாய்வேகமுடனூர்புகுந்து
மூதியதன்சொத்துமுழுவதையும் பேதமில்லா. (௧௱௭௰௮)

மற்றவிடத்தேபதுக்கிவாதியினிமேலிதனைப்
பற்றிமுடிந்தமட்டும்பார்க்கட்டுஞ் சற்றும். (௧௱௭௰௯)

இவலைவிடமாட்டேன்திரிந்துபடிகட்டிக்
கவலையுந்துயிழ்வான்கயவன் அவலமுற்ற. (௧௱௮௰)

மப்பினிலோர்வேளையந்தவாரண்டிற்சிக்கிவிட்டாற்
றப்பிவெளியேறுதற்குத்தந்திரமுன் டிப்படிவாய்ச் (௧௱௮௰௧)

சட்டதிட்டங்காட்டிச்சமர்த்தாகப்பேசினும்வெண்
சட்டைகண்டாற்கால்கள்தரியாதே கஷ்டமுற்ற. (௧௭௮௨)

## வாதியின்சங்கதி.

வாதிகளிகூர்ந்துவலியஜெயம்பெற்றோமென்
றோதரியவேமாப்புடையனாய் ஆதியெனும். (௧௭௮௩)

மீனாக்ஷிசுந்தரற்குமிக்கவபிஷேகமுதற்
றானாக்ஷியாகச்சமர்ப்பித்தே யானுல்நான். (௧௭௮௪)

நன்மையேசெய்திருக்கநாடுமெதிர்வாதியெனைத்
தின்மையுறப்பேசிமெத்தச்சீறினான் அன்னவனை. (௧௭௮௫)

ஊரார்சிரிக்கவொருநாளைக்கானாலும்
பாராச்செயிலில்வைத்துப்பார்ப்பேனான் பாருமென. (௧௭௮௬)

## வாதிவாரண்டெழுப்பல்.

நட்டணைகள்பேசிநயந்துபிடிவாரண்டுக்
கட்டளைக்காகப்படியுங்கட்டியே சட்டெனவே (௧௭௮௭)

வாரண்டுச்சேவகனைவல்லையுறக்கூட்டிவந்தே
யூரண்டிவைத்தங்குசாவியே நேரலனோர். (௧௭௮௮)

தாவளத்திற்பந்தகமாய்த்தங்குதல்துப்பாலுமறிந்
தாவலித்துக்கண்டுபிடித்தக்கணமே சேவகன்பாற். (௧௭௮௯)

காட்டியவனேகவிவன்காலயெமபாசமெனத்
தீட்டியவாரண்டைச்செலுத்தவே யாட்டமுற்று. (௧௭௯0)

## வாரண்டிலகப்பட்டபிரதிவாதி சேவகனை உறவுகொண்டாட்டல்.

வந்தீரோ அண்ணாவளர்குழந்தைகுட்டிகளுஞ்
சிந்தனையில்லாதெவருஞ்க்ஷேமமா முந்திநா. (௧௭௯௧)

னண்டியகோரட்டிலனேகந்தடவையும்மைக்
கண்டிருப்பேன்பேசிக்கலந்திலேன் பண்டுங்கள். (௧௭௯௨)

கீர்த்திகெடுநாளாவுங்கேட்டிருப்பேன்தங்களைநான்
பார்த்துவரவென்றற்பலசோலி யார்த்த. (௧௭௯௩)

சிரஸ்தேதார்மற்றுமுள்ளசேவகருத்தியோகர்
பரிக்ஷையுண்டெல்லாரும்பழக்கஞ் சிரஸ்ததார். (௧௭௯௪)

என்பாற்பிரியமவரோதோவிசேடமென
வன்பாற்கடிதமனுப்பினர் நன்பாலா. (௧௭௯௫)

நெய்தயிர்பால்காய்கறிகணேர்ந்தபழவர்க்கமிரும்
பைதவழ்தேனின்னம்பலசாமா னெய்துமனைச். (௧௭௯௬)

சேகரித்துநாளைநின்றுசெவ்வாய்க்கிழமையங்கு
மோகரித்துநான்வருவேன்முந்திநீ யேகுவையென். (௧௭௯௭)

றுதரவுஞ்செய்தங்கனுப்பினேனீருமந்தக்
காதர்கான்றன்னையெதிர்கண்டிருப்பீ ரீதுநிற்கத். (௧௭௯௮)

தூண்டுமிந்தவாதிக்கோர்துட்டளவில்யான்கொடுக்க
வேண்டியதேயில்லைவெகுமோசம் மூண்டவெனக். (௧௭௯௯)

காகாவிரோதிகளுமக்ரமவாதிப்பயலும்
வாகாகச்சேர்ந்துமறைவுதலா யூடிநித்துக். (௧௮௦௦)

கற்பனையதாயோர்கடன்பத்திரமமைத்துச்
சற்பனைவிரோதிகளேசாக்ஷியாய்ச் சொற்பாயிற்றி. (௧௮௦௧)

மட்டிவழக்கிட்டான்மறுபடி விக்குங்கேள்விகட்குத்
தட்டியெதிர்சொல்லத்தரமுண்டோ சட்டமுள்ளா. (௧௮௦௨)

கோரட்டில்நேரேகுறித்திடும்விசாரணையிற்
சீரிட்டென்பக்ஷஞ்செயமிருக்கப் பாரிஷ்ட (௧௮௦௩)

ரோதிபதியாயமுணராதஜட்சியசல்
வாதிபக்ஷந்தீர்ப்பைவழுத்தின னீதைநா. (௧௮௦௪)

னப்பீலில்மாற்றயடிப்பேனதாற்பெரிய
தப்பிதமனேகருக்குஞ்சள்ளையுண்டென் றப்புறமும். (௧௮௦௫)

நன்றிசெய்தலாலேநமக்கோர்குறைவும்வரா
தென்றெண்ணிப்பேசாதிருந்துவிட்டேன் பொன்றுகையை. ()

யாயிரத்தோடின்னமுமையாயிரமாறுலுமற்றப்
பேயரைப்போற்சற்றுமனம்பேதியேன் ஞாயமின்றித். (௧௮௦௭)

தொந்தமுள்ளதீர்ப்புத்தொகையைச்செலவுடனே
சந்தேகநீங்கச்சரிக்கட்டி முந்தாநாட். (௧௮௦௮)

செம்மடையன்றன்பாற்செலுத்திவரும்படியாய்
நம்முடையகாரியஸ்தர்நாகுவையர் தம்பிடையே. (௧௮௦௯)

கையுரக்கமாகக்கடுகியஜவாரியுடன்
பையுரக்கக்கட்டிப்பணமனுப்ப வையரந்த. (௧௮௧௦)

வாதிபாற்சென்றுமக்குவாஸ்தவமாயுள்ளதுகைக்
கேதுமறுபேச்சுக்கிடமில்லை யீதுடன்கோ (௧௮௧௧)

ரட்டுச்செலவிலவைரவாசியல்லதும
இஷ்டப்போற்றன்ஏரியிலாக்கமாய்க் கட்டுமிதை. (௧௮௧௨)

வாங்குவீரென்றுவெருவாய்நயந்துசொன்னரா
மாங்கவனெப்பாதாலடமீறி யீங்கு. (௧௮௧௩)

மறுபடியுங்கொண்டுவந்தார்வந்ததுகையைக்
கறுவிமுகர்ப்போட்டுமூங்கிக்கட்டி யுறுதியுடன். (௧௮௧௪)

கோரட்டில்நாலோக்குசாலாத்தொகைசெலுத்திச
சீரிட்டுவாரநெய்முறித்தெழுந்துச் சாரட்டு. (௧௮௧௫)

வண்டியுந்தயார்ப்படுத்தினைதிருக்குங்காலையுமைக்
கண்டேனிதுவுங்காளிகார்த்தேதர் பண்டிப்புரி. (௧௮௧௬)

மாதவத்தாலும்மைவரப்பெற்றேனுமிருவர்
பேதமில்லைநீரென்பிறவியே பூதலத்தில் (௧௮௧௭)

நல்லார்சிநேகமதைநாடுமெய்யன்றியிலை
நில்லாப்பொருள்தானிலைவரமோ நல்லோரே. (௧௮௧௮)

## வாரண்டுச்சேவகனைபிரதிவாதி வீட்டுக்கழைத்து வருதல்.

வாசனைசேரென்மனையில்வந்திருக்கக்கோர்வேளை
போஜனஞ்செய்தப்பாற்புறப்படுவோம் யோசனையேன். (௧௮௧௯)

வாருமண்ணுவென்றுபலவார்த்தைகளைப்பேசவிக்தக்
கூறுகெட்டவேனவாய்க்கூதறையன் நேருடனே. (௧௮௨௦)

மெய்ப்படுசொல்லென்றாநம்பிவேகமுடனெழுந்தான்
கைப்படுசெந்தோஷக்கவடுகெஞ்சன்டே பொய்ப்புளுகன். (௧௮௨௧)

## மனைவியிடத்திற்சொல்லுதல்.

நண்ணுமனையினிற்போய்நாயகியைக்கூவியென்ற
னண்ணாத்தைவந்தாரறியாயா நண்ணு. (கஅஉஉ)

யிருந்ததடிபாவாயிவர்நமக்குமெத்தப்
பரிந்திடுசிநேகசம்பந்தம் வருந்திநீ. (கஅஉங)

யாரென்றிராதேயிவருனக்குமச்சானும்
பூருவத்திற்செய்திருந்தபுண்ணியமே யோருருவாய். (கஅஉச)

வந்தாரிவற்குவரிசையுபசாரமிட்டு
விந்தையுடன்பேசாவிருந்திடுவோஞ் சந்ததமும். (கஅஉரு)

நம்மனையிலேபசுக்கள்நாலுழியோகறக்கும்
அம்மணத்தானல்விருந்துக்கஞ்சுவனோ கம்மலிலே. (கஅஉசு)

நித்தியமுந்தப்பாமனிகடைந்தவெண்ணெய்தனைப்
புத்துருக்குநெய்போற்புனிதமாய் வைத்துமலர்த். (கஅஉஎ)

தாதுலவுஞ்சாடிகளிற்றானிருக்குமேயதனைப்
பூதிச்செலவுபண்ணிப்போடாதே போதுமென்ற. (கஅஉஅ)

## பலகாரவர்க்கம் கூறுதல்.

பச்சரிசிமுக்குறுணிபற்றாதுபற்றலேபெண்
றச்சமயமூக்காலழுகாதே பச்சரிசி. (கஅஉகூ)

யின்னம்பதக்கிட்டாலேராளம்நீயென்ன
சின்னஞ்சிறிசோதெரியாதா பின்னுங்கேள் (கஅஙo)

பச்சைக்கடலைபசும்பயறுகோதும்பை
மொச்சையுளுந்துமுளைத்துவரை யிச்சையொடு. (கஅஙக)

பந்திநிறைசாரப்பருப்புவாதாம்பருப்பு
வந்தனவிதெல்லாம்வகைவகையா யந்திரத்தில். (கஅஙஉ)

மாவரைத்துத்தெள்ளிமதுரம்புகட்டியதை
நீவளமாய்ச்சேர்ப்பாய்நிமிடத்தில் காவினிய. (கஅஙங)

சீனிச்சருக்கரையுந்தேனுங்குடங்குடமாய்ப்
நானிச்சணமழைத்துநல்குவேன் மானேதண். (கஅஙச)

பூமலிவெண்பூந்திபொலிவுறுசிலேப்பிலட்டு
மாமதுரமிக்கமதுர்பேணி சோமாசா. (௧௮௩௫)

பாதுமல்வாகெய்யுருண்டையாலடைரவாலாடு
தாதுவிர்த்திசெய்திடுகுஞ்சாலாடு மோதுநொக்கல். (௧௮௩௬)

பால்கோவாசேவுபணியாரந்தோசைமன
மால்மேவுபோளிவடைசுகியம் நால்விதமாம். (௧௮௩௭)

அப்பளந்தேம்பாகோடதிரசஞ்சீராபருப்பி
முப்பழஞ்சேரல்வாமுதலாக விப்புவியி. (௧௮௩௮)

லென்னபலகாரமுண்டோயாவுமன்கைப்பக்குவத்தால்
நன்னயமாய்முந்திடக்கட்டும் மன்னுசுவை. (௧௮௩௯)

## விருந்துவளப்பம் கூறுதல்

காட்டுவிருந்தினுக்குக்காய்கறிசாமான்கள்பல
தேட்டமறக்கொண்டுவந்துசேர்க்கிறேன் நீட்டுசிறு. (௧௮௪௦)

சன்னச்சம்பாவரிசிச்சாதத்தைப்போதமுல்லை
மன்னுமலர்போலாய்மலர்த்திடியே யின்சுவையிற் (௧௮௪௧)

கூட்டுக்கறிகள்குழைகறிகள்செய்த்துவட்டல்
பாட்டிலைசேர்பச்சடிபொரிப்பாளிதங்கள் வேட்டருந்து. (௧௮௪௨)

மோர்க்குழம்பைச்சற்றுமுதிரவிடாமலுந்தீம்
பாற்குழம்பைமெத்தப்பசுந்துசெய்வா யேற்கும். (௧௮௪௩)

பருப்பிரசமுன்கையினூற்பக்குவமாணூலோ
கருப்பிரசம்போலினிக்குங்கண்டாய் விருப்புபெரும். (௧௮௪௪)

காயமதைக்கொஞ்சங்கனமாகச்சேர்த்திடுவை
வாயுவைக்கண்டிக்குமலங்கார்த்தும் ஆய. (௧௮௪௫)

கறிவகையில்மிச்சங்கடுகையிடாயத்தா
விறுகுமலங்காய்கையெழுமே நறியசெழும். (௧௮௪௬)

பாயசத்துக்காகப்பழுதறவே தும்பைரவ்வை
யாயதிற்றீம்பாலேயளந்துவிட்டுத் தூயபன்னீர். (௧௮௪௭)

சுக்குச்சாதிக்காய்துடிசேர்[illegible]னே
[illegible]க்காசம்வாதாம்பருப்பு[illegible] மொக்கலஞ்சு. (௧௮௪௮)

சேருங்கற்கண்டொடுநற்சீனியுமொன்றாய்க்கலந்து
சாரந்தெளிவுபடத்தாளித்து மாரஞ். (கஅசகூ)

சிதமுறவும்பக்குவமாய்ச்செய்தாலண்ணாவுக்
கதுபிரியமாயிருக்குமன்றோ புதுமலரிற். (கஅருo)

றேமதுரம்போலுந்திரட்டுப்பால்பண்ணுவதை
நீமறந்திடாதேதினைவில்வைப்பா யாமிநிற்றப். (கஅருக)

## விருந்து வளப்பம்

பாதுபலகாரவர்க்கம்யாதிசெலவாகமற்றப்
பாதியைச்சூதானப்படுத்துவாய் ஓதுமிவர். (கஅருஉ)

கூடவேசென்றந்தக்கோர்ட்டிற்றுகைசெலுத்தி
மாடிதிகழண்ணுமனைபுகுந்து நாடியண்ண. (கஅருங)

தேவியார்மற்றும்வளர்செல்வரையும்பார்த்தவர்க்கு
நாவினியபட்சணமுநல்கியே மாவிலேயி. (கஅருச)

லண்ணியர்க்கோர்பட்டுமருமைக்குழந்தைகட்கு
வண்ணச்சிற்றாடைவழங்குவே னண்ணாவுக். (கஅருரு)

கூதாப்பெரியசரிகையுருமால்கொடுப்பே
னீமெதனக்கோர்லெட்சயந்தானில்லையே மீதி. (கஅருசு)

யிறப்புத்துகையிலிவர்க்கியன்றமட்டும்
குறிப்பறிந்துபின்னுங்கொடுப்பேன் மறுத்துநீ. (கஅருஎ)

வேண்டாமென்றோதிவெகுவாய்த்தடுத்தாலும்
நீண்டகைகொடாதினிமேனிற்குமோ வீண்டிலகி. (கஅருஅ)

லிவ்வயதுக்குள்ளாய்நானெவ்வளவோதேடியபொன்
னவ்வளவுமேவிறையமாக்கினேன் மெய்வருந்து. (கஅருகூ)

தினர்களுக்கியாமற்றேடும்பொருளவர்பின்
போனதனுவுண்டோபுகலுங்காற் றானகுணம். (கஅசுo)

மன்னியதோர்மூவேழுவள்ளலெனக்கீர்த்திபெற்று
ரன்னவர்களீகையினாலல்லவோ வென்னண்ணா. (கஅசுக)

வெந்தாகமீறவந்தோவெய்யிலிடைநடந்து
வந்தார்பசிபொறுக்கமாட்டிலா ரெந்தோகா. (கஅசுஉ)

யற்றத்தரித்திரமென்னைப்பளத்தைவாட்டியிங்ங
வற்றலேனென்றுய்வதக்கியே பற்றித். (கஅசுங)

தொழவுரியமாற்றுத்துவையவிட்டோர்குத்துப்
பழையதுவைப்பாய்முன்பசிக்குக் குழைவுறவே. (கஅசுச)

வாய்க்குருசியாய்வளமாய்க்கறிவகையுஞ்
சீக்கிரமாகட்டுஞ்செழுஞ்சமைய லாக்கர்கடை. (கஅசுரு)

மாடுலவுஷாட்பிற்சாமான்கொஞ்சம்வேண்டுமதை
யோடியிதோவாங்கியொருமினிட்டில் நாடிமிக. (கஅசுசு)

## பிரிதிவாதிவாரண்டுசேவகனுக்குத்

## தப்பியோடுதல்.

வாரேன்வாரேனெனவும்வாரண்டிச்சேவகனைக்
காரியம்போலெத்திக்கடும்புளுகன் பாரி. (கஅசுஎ)

யளப்பிதுவேயாமென்றதுபோக்காயோடி
யொளித்திடவச்சேவகனுமுள்ளங் களித்து. (கஅசுஅ)

வருவான்வருவானென்றெண்ணிவழிபார்த்து
மொருநாளுங்காணுனுணங்கி மருவிநம்மை. (கஅசுகூ)

## சேவகன்மனம்வருந்தல்.

மோசமேசெய்ததிலேயூர்மோசமிலேயேமிகப்பே
ராசையெனக்கூட்டியலைத்தித் தோசியிவ. (கஅஎ0)

னெத்தனைபோவார்த்தைப்பிதமாயுரைத்தமொழி
யத்தனையுமெய்யென்றேயானிருந்தே னித்தராமாய். (கஅஎக)

வஞ்சிப்பானென்றுகிஞ்சமாத்ரமறிந்தாலிவனை
மிஞ்சிப்பறக்கவிடுவேனோ கொஞ்சியுல. (கஅஎஉ)

கேத்துகொடையாளியைப்போலென்னென்னமோபயல்தான்
பூத்தானங்காட்டிப்புளுகினனே தூத்தேரி. (கஅஎங)

நல்லவிருந்தாம்வீட்டில்நாஞுழிப்பாலுணதாம்
அல்லவுமெய்ச்சாடியுளவிலையாம் வெல்லமிட்ட. (கஅஎச)

கூட்டுக்கறியாங்குழைகறியாம்வக்காளைப்
போட்டுக்கிடந்தபுளிக்கறியா மூட்டுகின்ற (கஅஎரு)

பச்சடியாம்நெய்யாம்பருப்பாமதிரசமாங்
கிச்சடியாம்வைச்சடிச்சுக்கிண்ணுவனும் பட்சணமாம் (கஅஎசு)

நற்றிரட்டுப்பாலாமென்னயகிக்குப்பட்டுடையா
முற்றுமெனக்கோருநூமாலாஞ் சொற்றகொடைக். (கஅஎஎ)

கன்னுவதாரக்கடும்புலியாய்யாவர்தடை
சொன்னாலும்வாரிச்சொரிவானும் இன்னபல (கஅஎஅ)

வார்த்தைகளாலேமாத்திமாயமாய்த்தப்பியசங்
காத்திமகன்போனவழிகாணேனே யாத்தாடி. (கஅஎகூ)

பாடெடுத்தகள்ளனுக்கிங்காக்கியிட்டகள்ளியிவட்
கீடொருவருண்டோவென்றிவ்விதமாய் வாடியவ. (கஅஅ0)

னங்காங்குபார்ப்பானயர்த்துமனங்குழைவா
னேங்காமலேங்கியெழுந்திருப்பா னீங்கிவனும் (கஅஅக)

ஆஜரில்லையென்றுசொல்லியத்காட்சிவாங்கவென்று
லோசரியாய்வாதியவனெப்பானே நீசகன்செய் (கஅஅஉ)

மோசமதையுள்ளபடிமுற்றுமொழிந்தாலுமந்த
நாஸரேந்தன்சொல்மொழியைநம்பானே பேசியநா. (கஅஅங)

ளோரெட்டிற்சேவகன்பாலொப்பித்தேனென்றுசொல்லிக்
கோரட்டில்வாதிமனுக்கோருவனே நேரிட்ட. (கஅஅச)

குற்றமதைக்கண்டுணர்ந்துகோரட்டார்சேவகத்தைப்
பற்றறவுநீக்கிவிடப்பார்ப்பாரே நற்றயவா. (கஅஅரு)

யாதியிலென்பாட்டனதன்பேரிலென்தகப்பன்
பாதுகொண்டியானும்பரம்பரையாய் மேதையுடன். (கஅஅசு)

சாலவெண்பத்தேழ்வருடச்சார்வீசேயாகுமிந்த
வேலையிழந்துவிடுவேனே தோலாண்டி (கஅஅஎ)

வேடம்பூண்டானாலும்வெய்யனைநான்கண்டுபிடித்
தேடைரிபோட்டவனைத்தெண்டிக்கக் கோடறிய (கஅஅஅ)

நாடிவருவேனெனவுநாளுமிவன்போற்சிலருந்
தேடியலைந்தோடித்தியங்கிரால் நீடுகேடற் (கஅஅகூ)

பேரண்டந்தன்னில்வெகுபேர் கள்பயங்கொண்டுபொல்லா
வாரண்டெவ்வேலோவருமோவென் றீரற். (க௮௬0)

கருகியதுவேங்ளைவாய்க்கண்கலங்கிநாளு
மருவுகின்றபோழ்துவழிமே லொருவனங்கு. (க௮௬க)

தாவுசட்டைபூண்டவனுய்ந்தன்போக்காய்ப்பாதைவரச்
சேவகனோவென்றுதிகிற்பிடித்து நாவிதனும். (க௮௬உ)

பாதித்தலைசிரைத்தும்பாதிசிரையாதிருக்கும்
போதுபறிபட்டுப்புளக்கடையாய் மோதுபெரும். (க௮௬௩)

காடுகளிலேபாகுந்துங்காணுமலைப்புடம்பும்
தேடியொளிவார்சிலபேர்கள் நீடுலகி. (க௮௬௪)

## மற்றும்பிரதிவாதிகள்வாதியைக்கண்டு கேலிபண்ணுதல்.

லார்ப்பரித்துநாளுமரசுபுரிகோரட்டார்
தீர்ப்புரைத்தபின்னுஞ்செலுத்தாமல் சூர்ப்புறத்தன். (க௮௬௫)

மாவளஞ்சேராஸ்தியெல்லாமற்றவர்க்குவிற்றுவிட்ட
பாவனைபோற்பத்திரமும்பத்திபண்ணிக் கூவிக். (க௮௬௬)

கருதுமசல்வாதிதனைக்கண்டவுடனேங்கிச்
செருமிகின்றுமீசைதிருத்தி மருவுஜெயிற். (க௮௬௭)

கெல்லாரைப்போலுமினியபடிகட்டவிதி
யில்லாப்பயற்கேனிறுமாப்புத் தொல்லேமுடை. (க௮௬௮)

நாறுஞ்செயில்தனையுநானறிவேனென்றுசொல்லிச்
சீறித்திரிவார்சிலபேர்கள் மீறுகின்ற. (க௮௬௯)

## முதலாளிகள் ஒப்பந்தம்செய்தல்.

வாணிபர்கள்கைப்பணத்தைவட்டிக்காயிச்சைகொண்டு
நாணயமிலாதவர்க்குகல்கியே வீணிற். (க௮௭0)

நெருத்தெருக்கடோறுந்திரிந்தலைந்துசிந்தை
வருத்தமிகக்கொண்டுமறுகால் ஒருத்தருக்குஞ் (க௮௭க)

செப்புக்காசேனுஞ்செலவிடல்கூடாதெனவே
யொப்பந்தம்பேசியொழித்துவிட்டா ரிப்பரிசால். (க௮௭உ)

வாணிடுவிற்போன்றநுதல்மானேவெறுங்கைமுழந்
தாணிடுவதுண்டோநீசாற்றுவா யானாலும். (கக௱0௩)

நன்கார்ந்தபண்டிகையைநாமுஞ்செய்வாமெனச்சீ
வன்போலும்பூண்டிருந்தமங்கலத்தை முன்போலும். (கக௱0௪)

கொண்டோடிவிற்றுக்குலாவிபதீபாவளியை
யுண்டாடல்காட்டியொழித்தனரே மண்டலத்தோர். (கக௱0௫)

இவ்விதமாய்ப்பஞ்சத்திடர்மருவுகாலையினிற்
றெய்வபலத்காலுமிதைத்தீர்ப்பமெனச் செவ்வியல்சேர். (கக௱0௬)

## மஹாநாட்டார்பஞ்சநிவர்த்திசெய்யச்

## சங்கங்கூடுகல்.

நானுகுலத்துதித்கநாட்டுத்தலைவர்களும்
மானபிமானமுள்ளமாந்தர்களும் ஞானவளம். (கக௱0௭)

பொங்குமதுரைப்புதுமண்டபத்தில்மகா
சங்கமெனச்சேர்ந்துசபைகூடி யிங்குநாம். (கக௱0௮)

ஆண்டவனிலாதவடிமையோநம்மைவழி
பூண்டகுலதெய்வமென்னபொய்த்ததோ யீண்டியநம். (கக௱0௯)

கைக்குள்வெண்ணெய்க்கட்டிகனமாகவைத்திருந்தும்
நெய்க்கலைவார்போலுநினைவயர்ந்தோம் பொய்க்கலியாற் (கக௱க0)

சங்கரனுமய்யமெடுத்துண்டான்றடங்கடலின்
மங்கையுடன்காமுறைந்தான்மாலென்றுஞ் சங்கமதில். (கக௱கக)

அவ்வைசொன்னநீதியறியோமோநாமினிமேற்
றெய்வசன்னிதானமதிற்செப்புவோம் பவ்வமெழுந். (கக௱க௨)

சூரியனைக்கண்டபனிதோன்றுதகல்வனபோற்
பாரில்வினையெல்லாம்பறந்துவிடும் வாருமென்று. (கக௱க௩)

## சோமசுந்தரக்கடவுள் சன்னிதானத்தில்

## நாட்டார்கள்முறையீடு.

பற்றுயத்தொடரும்பலத்தொலைத்துமுத்திதரும்
பொற்றுமரையின்புனலாடி முற்றுரிய. (கக௱க௪

சத்திசிவமாகிநிறைதற்போதசிற்பரமாஞ்
சித்திவிக்கினேஸ்வரனைத்தெண்டனிட்டு　　மொய்த்துலவு. (௧௬௧௫)

கங்கெழுகதம்பகவனந்திகழ்மதங்கியுமை
பங்கயமணங்கமழ்பதந்தொழுது　　பங்கமர். (௧௬௧௬)

சதாசிவசுதாகரசடாதரசபாநட
னிதாகிதமிலாதவனிராசத　　னதீதிய, (௧௬௧௭)

னிராகரனிராமயனிராகிர்தனிராகுல
சராசரபராபரதயாபர　　னராவணிகொள். (௧௬௧௮)

வேதாந்தவேதியனைவேதனுமால்காணரிய
நாதாந்தமோனநவமணியை　　ஆதார. (௧௬௧௯)

மேவுகருணாலயனைவீரியப்ரபாகரனை
மூவுலகுந்தானுமுதற்பொருளைத்　　தேவாதி. (௧௬௨0)

தேவசகநாயகனைத்தேசோன்மயப்பொருளைப்
பாவனைக்குமெட்டாப்பரஞ்சுடரை　　யாவிதொறு (௧௬௨௧)

மெள்ளுக்குளெண்ணெய்போலெங்குநிறைகின்றவனை
யுள்ளுக்குமுள்ளாயுறைபவனைத்　　துள்ளிவரு. (௧௬௨௨)

தந்தியதள்பூண்டவனைச்சச்சிதானந்தனைப்பொன்
னந்திவண்ணம்போலொளிருமற்புதனை　　சுந்தரற்குத். (௧௬௨௩)

தூதுசென்றமாமுதலைச்சூலாயுதக்கரனை
யாதிசருவேச்சுரவனுமயனைச்　　சோதிதவழ். (௧௬௨௪)

பங்கயக்கண்ணற்குப்பருதிவட்டந்தந்தானை
அங்கயற்கண்பாகமமர்ந்தானை　　யெங்கள்சிவ. (௧௬௨௫)

சொக்கேசரென்னுஞ்சுடர்தனைக்கண்டானந்த
நெக்குருகிநெக்குருகிநெக்குருகி　　யக்கணமே. (௧௬௨௬)

நாட்டாரனைவர்களும்நாடியகண்ணீரரும்பச்
சாஷ்டாங்கதண்டன்சமர்ப்பித்தே　　நாட்டமுடன். (௧௬௨௭)

வானுதிபூதமுதல்மற்றும்பொருளெவையுந்
தானாய்நிறைந்ததயாபரனே　　மேனனி. (௧௬௨௮)

லம்புயனுமாலுமுடன்றாற்றுமிகல்மாற்றுதற்குத்
தம்பவழலாகின்றதாணுவே நம்புபஞ்ச. (௧௧௨௯)

வன்படையாலன்றிறந்தமாயவராகக்குருளைக்
கன்படைந்துபாலருத்துமப்பனே மின்சால். (௧௧௩௦)

உலகந்தனைப்படைத்திரோதரியரிவர்
பலவுமினிதாகப்படைத்தீர் உலவுமதற் (௧௧௩௧)

காதரமாய்மண்ணுறும்விண்ணுமாதாரமாக்கிமலை
வேதமுறுசெல்வுயிரும்ரெக்ஷித்தீ ரோதுமிந்நாள். (௧௧௩௨)

அவ்விரண்டையுஞ்சுருக்கிலந்தோவான்மாக்களினி
யெவ்விதமுய்தற்கியலுமென்செய்வோர் செவ்வே. (௧௧௩௩)

பருவகாலத்தில்மழைபார்மீதுபெய்யா
தரியவிளைவில்லாதருபிப் பரவுயிரும். (௧௧௩௪)

வாடுவதுநாயமதோமாமழையிறை பொருளை
தேடக்கிடையாச்செழுங்குன்றே நீடுகடைக். (௧௧௩௫)

கண்பார்த்தடியார்கலக்கந்தவிருமென்று
பண்பாய்த்துதிகள்பலபகர்ந்து நண்பொடெதிர். (௧௧௩௬)

நின்றுநெடுநேரநிகழ்த்துமொழிகேட்டையன்
கன்றுகண்டவாப்போற்கனிந்திரங்கி பொன்றுக்கும். (௧௧௩௭)

## சோமசுந்தரக்கடவுள் திருவாய்மலர்தல்.

அஞ்சாதிருங்கடமையாதரிப்போர்நீவிரினிக்
கொஞ்சமேனுங்கவலைகொள்ளாதீர் பஞ்சமிங்கு. (௧௧௩௮)

நேர்ந்தவிதமெம்மைநினையாதிகழ்ந்ததினும்
காந்திவிளையாடல்சற்றேகாண்பித்தோ மாய்ந்திடுங்கா. (௧௧௩௯)

லுள்ளத்துக்குற்றமொருகோடியானாலும்
பிள்ளைக்குந்தாய்க்கும்பிணக்குண்டோ வள்ளலென்று. (௧௧௪௦)

நம்மிடம்வந்தன்பாயைந்துமொழிந்தீர்களுங்க
டம்மனைப்போலேசகலசம்பத்தும் ரம்மியமுடன். (௧௧௪௧)

நீங்கள்பெற்றுப்பூவுலகினீடுழிவாழ்ந்திருக்கப்
பாங்காயுமக்குவரம்பாலித்தோ மோங்குலகில். (௧௧௪௨)

இன்றுமுதல்வானமிறங்கிவருஷிக்குமிகு
நன்றிகளுண்டாகுமினிநாடோறும் வென்றிபொரு. (௧௯௪௩)

வேகவதிமுதலாய்மிக்கநதிதோறும்பிர
வாகமலிந்துவளம்பெருகும் நாகுலவு. (௧௯௪௪)

வாவிதடாகங்களெல்லாமல்கும்புனல்சிறந்து
மேவுசெய்ந்நென்முப்பூவிளைவோங்கும் டாவமறம். (௧௯௪௫)

வஞ்சங்கொட்டோடுபிணிவாய்மையறங்காருண்யங்
கொஞ்சிக்கலந்துகூடியிருக்கும் கஞ்சமலர்ச் (௧௯௪௬)

செந்திருவும்வீற்றிருப்பள்தேவாலயங்களெல்லாஞ்
சந்ததமும்பூஜைதழைத்தோங்கும் மந்திரிகளுந். (௧௯௪௭)

சேனைராசாங்கமொடுசெங்கோல்தழைத்தோங்குந்
தானதவமெல்லாந்தலையெடுக்கும் கானக். (௧௯௪௮)

கராசலமாமாதிகளுடையெறும்பென்றுரைதுஞ்
சராசரங்கள்யாவுந்தழைக்கும் பிராகுலமாய். (௧௯௪௯)

வீரியத்தைத்தம்மிடத்தேமிகவார்ந்துவீரமிலுகன்
மாரிபொழிந்தவுடன்மாநிலத்திற் சிறுநாவே. (௧௯௫௦)

புத்தியக்காரரெனாமுழுமெருதுகட்குமுயர்
வித்தைபொருந்துவினைபயிற்றுகட்கும் முந்து. (௧௯௫௧)

பசுக்கூடமேய்ப்பதற்குக்காட்டிடையந்ததனிற்
பசையில்லாதென்செய்வீர்பாவம் பிணைசவாகத். (௧௯௫௨)

திக்குமுடனிதனைத்தேடிவிவசாயமதை
செய்கையுடனீவீரியற்றுகிறு மேற்கணவே. (௧௯௫௩)

மூந்தும்பலன்கள்வரமூன்றுதிங்கள்செல்லுமிப்போ
துந்தும்பசித்துயரையோட்டுமோ வந்தோ. (௧௯௫௪)

சிசுக்கள்முதலாய்த்தியங்கவருத்தும்
பசித்துயர்கேட்டுள்ளம்பரிந்தேன் வசித்துநீ. (௧௯௫௫)

ராறுதலையுள்ளவனென்றன்பாகவந்தவுமக்
காறுதலையென்சொல்லியாற்றுவேன் கூறியுங்கள். (௧௯௫௬)

## சோமசுந்தரக்கடவுள் தமதுசரித்திரங்கூறுதல்.

தன்பாடுமுற்றுமென்பாற்சாற்றினீருங்களிட
மென்பாடுஞ்சற்றேயியம்புவே னன்கார்ந்து. (கசுருஎ)

வாழ்வுயர்பொன்வெள்ளிமலையாயிருந்தெனக்குந்
தாழ்குடிலப்பஞ்சந்தலைப்பாரஞ் சூழமுனி. (கசுருஅ)

வோர்கள்பன்னியார்நகைக்கலூண்மண்டையோடேந்திப்
பாரிலையமேற்றதுவும்பண்டறிவீர் ○ பார்வைக்கு (கசுருகூ)

நாருமதியாதவனை * யங்கமெடுத்தேன்பவத்தை
யீருமடியாருக்கெளியனான் யாருமற்றான். (கசுசுo)

அன்னைபிதாவில்லாவனாதியிவனென்னுமொழி
கன்னமுறவஞ்சிநெடுங்காடுற்றேன் பின்னுமோர். (கசுசுக)

கர்பத்தில்ரெண்டானைகட்டியதனாலடைந்த
சம்பவங்கள்போதுந்தலைமுறைக்கும் வம்பியரா. (கசுசுஉ)

யுற்றமனையாட்டிகளிலோங்குமிளையாளொருத்தி
யெற்றிமதித்தென்றலையிலேறினாள் மற்றொருத்தி (கசுசுங)

யண்டாதநீலியடங்காப்பிடாரிமணங்
கொண்டேற்குமஞ்சாக்கொடுஞ்சூரி மண்டமரில். (கசுசுச)

விற்காட்டுந்திக்குவிஜயமதிலென்படையைப்
பற்காட்டியோடும்படியடித்தா ளிற்குரிய. (கசுசுரு)

மாதிவளோ ● பொல்லாத ... வம்பியினாலன்றோநான்
பாதியுடலானதையும்பாருங்கா ணாதிமுத. (கசுசுசு)

லஞ்சுதலையாகின்றேனங்கமெல்லாஞ் * சூடுபட்டேன்
கொஞ்சவிதியானடுக்கக்கொண்டுநின்றே னஞ்சமையி. (கசுசுஎ)

---

○ பார்வைமதி-ஆதவன். * அங்கம்-எலும்பு.

● பொல்லாத-பொள்ளாத வம்பி வாசனையுடையவள்.

... சூடு-அக்கினிமயம்.

* நடுக்கம்-நடுத்தலை.

லாட்டு[illegible]ட்டுக்கோட்டிகொண்டாளந்தோவிதையுழாக்கி
ஞட்டிலுள்ளார்பின்னுநகைப்பரே மீட்டுமந்தக். (௧௱௬௮)

கட்டழுகிசொல்வார்த்தை ௦ கண்டு - பயந்தேனென்று
பட்டம்வைச்சுத்தேவர்பழிச்சார்கள் நட்டணையாய்ப். (௧௱௬௯)

பிட்டுக்குமண்சுமந்தேன்பின்னிடையன்கைவாளால்
வெட்டுண்டேன்மேனிமிகச்சிவந்தேன் செட்டியெனக். (௧௱௭௦)

கோதில்வளைகள்விற்றேன்கொள்ளாவிறகுவிற்றேன்
சாதிகெட்டவேடனெச்சில்தானுண்டேன் மாதுணியாய்ச். ()

சென்றண்டர்காத்திருந்துதில்லையினிலாடுந்தே
னென்றென்னைப்பலத்திலேற்றிடு ரன்றொருநாள். (௧௱௭௨)

மாவகத்தைக்கொண்டவஞ்சர்வாழ்புரத்தைநானெரித்து
மீசலகத்தைக்கேட்டாற்சிரிப்பாகும் பூவில்மறு. (௧௱௭௩)

போக்கில்லானென்றுமுழுப்பூச்சாண்டியென்று * மண்டங்
காக்கையென்றும்பொல்லாக் ௦ கசடனென்றும் நோக்கரிய ()

கள்ளன்மழுமாறியென்றுங் ‡ கஞ்சாக்குடியனென்றும்
பிள்ளைதின்னிப்பேயனென்றும்பித்தனென்றும் முள்ளடிய. ()

௦ ஈனமுள்ளானென்றுமிருகாலுந் ¤ சந்துமிகப்
போனவிவனென்றும் † புழுக்கையென்று மானமட்டு. (௧௱௭௬)

மெய்யில்லானென்றும் வடிவேலருட § மாமிதனைக்
கைகலந்தான் * போகிக்கடையனென்றுஞ் செய்யதங்கை. (௧௱௭௭)

மேலனலைமூட்டிவிட்டவீம்பனென்றுமென்பேர்சொன்
னலெவர்க்குங் ÷ கேவலமுண்டாமென்றுஞ் நால்முனிவர். ()

௦ கண்டு கற்கண்டு - பயம்பால்

* அண்டங்காக்கை உலகங்காக்குங்கடவுள்

௦ கசடன்கஜத்தைஅடஞ்செய்தவன்

‡ கஞ்சாக்குடியன்-மேலானகுடும்பம்

௦ ஈனமுள்ளான் - குற்றம்நினையாதவன்

சந்து-தூது-புழுக்கை-உஷ்ணமுள்ளவர்

† மெய்யில்லான்-சரீரமில்லான்

§ வேலன்மாமி மான்

* போகிக்கடையன் - நாகக்கணன்

÷ கேவலம் மோக்கம்.

யார்த்தவொருபள்ளியின்மேலாசைகொண்டுகூடினனிவ்
வார்த்தைவெளிவிடவும்மார்க்கமோ தீர்த்தனிவன். (உ0உஉ)

பன்னுசெயல்கூறிலொருபாரதமதாய்விளையு
முன்னியதைச்சொல்லமுடியாதே யெங்கிலமும். (உ0உங)

விண்டுவென்றுநாமமுற்றமேற்பகட்டேயன்றிவற்கும்
பண்டுரியகைப்பொருளும் * பஞ்சமே கொண்டணிந்த. (உ0உச)

பீதாம்பரகௌஸ்துபத்தினைக்குரியதிந்தச்
சூதாம்பரனுக்கோசொந்தமில்லை மீதூரு. (உ0உரு)

மைவசங்குமேலான்வடபத்ரசாயியிவன்
கைவசம்வேறுஸ்திரியொன்றுங்காடுமேல் (ளய்ய. (உ0உசு)

## பிரமாவின் சரித்திரம் கூறுதல்.

னரியவுந்திமீதுற்றுருபபிரமனென்போன்
றிரிமூர்த்தியிலிவனுஞ்சோக்கை பெருகியவோ (உ0உஎ)

ரீரேழுலகமெல்லாமியாமேபடைத்தனமென்
றோராவகங்காரமுற்றுன் பேரான. (உ0உஅ)

தாதையுடனெதிர்த்தான்றுருனுவழல்மாமுடியைப்
போதரவிற்கண்டனென்றும்பொய்சொன்னன் போதித்துத். (

தாழைமடலதனையுந்தான்கெடுத்தான்பூவுலகில்
வாழிடமில்லாமல்மறுகினுன் வேழமொழித் (உ0கூ0)

தெய்வமணிபாந்திலோத்தமையென்பாள்பொருட்டா
லெய்துதலையொன்றையினிதிழந்தா னுய்வுறசீர். (உ0கூக)

துய்யகலைவேதமதைச்சோமுகாசூரனிட
கைபிற்பறிகொடுத்துக்கன்றினுன் மெய்யிற். (உ0கூஉ)

0 சுழங்குறுநானேசிருஷ்டிகர்த்தனென்றுனென்று
மிழந்ததலைபடைக்கவேலான் குழந்தைச். (உ0கூங)

சிறுவனுரைகேட்கத்தெரியாமல்மாழ்கி
வெறுவிலிபோனின்றுவிழித்தான் கறுவியவன். (உ0கூச)

---

பஞ்சாயுதம்.0 கழங்கு-அபிஷேகம்.

ஞேங்கித்தலைதகரவோர்குட்டுவைத்திவனைத்
தாங்குசிறையிலங்குதானிட்டான் வாங்கலுறு. (உ0௩௫)

மைச்சலதிப்பாருலகில்மானிடர்கள்யாவரையு
மச்செல்லாமொன்றாயமைவித்துப் பக்ஷமுடன். (உ0௩௬)

வாழ்ந்திருக்கவுஞ்சிலரைமாவறுமையாலிடைந்து
தாழ்ந்திருக்கவும்பலரைத்தாபித்தான் வாழ்ந்தவரி. (உ0௩௭)

லாசுகவிநாவலர்களாய்ந்துதமிழ்ப்பாடினுமோர்
காசுதவாலுத்தக்கயவராய் மாசுளராய். (உ0௩௮)

நல்விற்பனமிலராய்நாணுப்பழியினராய்ச்
செல்வநிலையென்றசெருக்குளராய்க் கல்வி. (உ0௩௯)

யருமைதெரியாமுட்டாளாய்ப்படைத்துவிட்டான்
பரவுசுத்தமுட்டாட்பதுமன் மருவுமிவன். (உ0௪0)

செங்கரத்திற்றண்டுமெண்டைதீட்டும்படைதவிரப்
பொங்குமுறவேறுபொருளுமில்லைத் தங்குதற்கில். (உ0௪௧)

காலயமுமில்லையருள் பூசனையுமில்லை
யேலுமிவன்செய்திருக்கட்டுஞ் சால்புறுமென். (உ0௪௨)

## குமரவேள் சரித்திரம் கூறுதல்.

மைந்தர்களிற்பின்னவனும்வைவேற்குமரனென்பான்
செந்திருமான்மெச்சுந்திருமருகன் முந்துகுரு. (உ0௪௩)

வன்னவயன்றனரியோம்பிரணவத்தின்
றன்னுரையேசொல்லத்தறுகிடினும் பொன்னம்மான். (உ0௪௪)

பாலனென்றுசற்றும்பச்சாத்தாபமின்றியிரு
காலில்விலங்கிட்டடைத்தகன்னெஞ்சன் மேலுறையும் (உ0௪௫)

தேவருக்கெல்லாமதிபன்றேவேந்திரன்மகளார்
பாவைதெய்வகுஞ்சரிதன்பாலிருக்கக் கேவலமாய்க். (உ0௪௬)

வேட்கைராதன்சொற்கொண்டுவனத்துபுக்கி
வேட்கைதரமிகுப்பவேடனைய்த் தூக்குகிழப். (உ0௪௭

பண்டாரமாகிப்பருவேங்கையுமாகிக்
கொண்டார்நகைக்கக்குறம்பாடி வண்டாரம். (உ0சஅ)

வந்திக்குமரவினுள்வள்ளியின்மேலாசைகொண்டு
முந்துகுலதர்மமுறைமைதப்பிச் சிந்தையினில். (உ0சகூ)

நாணுதலுமின்றியந்தநாறக்குறக்குலத்தில்
வேணுமென்றேசம்பந்தமேவினான் நீணிலத்திற். (உ0ரு0)

பின்னையொருமாமிதனைப்பெற்றவள்மேலாசைவைத்து
மன்னுமதன்வேலையுறமாட்டினான் பொன்போலும். (உ0ருக)

பெற்றோர்க்கடங்குமென்பாபிள்ளையிவனெனக்குச்
சற்றுமடங்கான்றகப்பன்சாமியே தொற்றுவனைச். (உ0ருஉ)

செட்டியிவன்வேடுவர்கள்சேர்க்கையினாலன்றொருநாட்
† சட்டியிலே ○ கொக்கவித்துச்சாப்பிட்டான் மட்டடங்காக். ()

கோழிபிடிக்கியென்றங்கூருலகிற்பேரெடுத்தான்
வாழ்வணிகமுகைமயெனவந்துதித்தான் சூழுமலைக். (உ0ருச)

குன்றுகடோறுந்திரிந்துகூத்தாடியானதல்லா
லன்றவனுக்கேதேனுமாஸ்தியுண்டோ வென்றுஞ். (உ0ருரு)

## விநாயகர் சரித்திரம் கூறல்.

செழித்தபுகழ்முத்தமகன்செய்திசொல்லக்கேளீர்
பழிச்சுலகோர்நாளும்பழிக்க வழிக்கரையில். (உ0ருசூ)

வித்தனியிருந்துவேற்றுருவந்தானுகி
வாதமெய்த்தூங்கல்முஞ்சியா யோவெனவே. (உ0ருஎ)

ன்வாய்ப்பல்லொன்றுடைந்துமூக்குங்கிடையாமல்
ன்வாயொன்றில்லாமனல்வாயாய்ப் பொன்வாய்ந்த. (உ0ருஅ)

ண்ணுஞ்சுருங்கியிருகாதுமுறமாகியயன்
ண்ணிவைத்தகாலுஞ்சப்பாணியாய்த் தண்ணீரின். (உ0ருகூ)

சாலதனையொப்பாய்ச்சரிந்துமகோதரம்போல்
மேலும்பெருவயிறுவீங்கியே ஆலோசனம். (உ0சு0)

† சட்டி-ஆறுவதுதிதி. ○ கொக்கு-மாவாரணத்துரண.

போலுமுடல்மூவிடத்திற்பொத்துமிகச்சீழ்வடிந்து
மூலத்திலேவிழுந்துமுற்றினதும் பாலகனைப். (உ0சுக)

பற்றியொருவீட்டெலியும்பாய்ந்துகொடுபோமென்றாற்
பெற்றமனம்பித்தலவோபேசுங்கால் சற்றுமிகைக். (உ0சுஉ)

கண்டுமெனந்தாழாமற்காலவிடமென்னுநஞ்சை
யுண்டேனொடுக்கியுடன்மெலிந்தேன் விண்டுமெனும். (உ0சுங)

மாமனார்தன்வாயில்மண்போட்டறைந்துகொண்டு
சேமவுடல்கறுத்துத்தேங்கினான் பூமலரோ. (உ0சுச)

னின்னமறைவாயிருந்துதொழிலயர்ந்தங்
கன்னமிறங்காமலலையிறான் மன்மதனுஞ். (உ0சுரு)

சீற்றவனலால்வெதும்பித்தேடுமெந்தன்கூர்விழிக்குத்
தோற்றான்பிரமாதிகட்குந்தோற்றானே யாற்றுகுகன். (உ0சுசு)

தன்பிறவிக்குள்ளஞ்சலித்துமனங்கசிந்து
பின்புகண்ணீராறாய்ப்பெருகியே முன்பிலய்ய. (உ0சுஎ)

மீறுகின்றசத்திமிகவேயதிகரித்துக்
கூறுபட * பிணிமுகத்திற்கொண்டுநின்றான் மாறுது. (உ0சுஅ)

கண்ணோடுகண்ணையொருக்காலும்பொருந்தாமல்
விண்ணோர்களெல்லாம்விழித்திருந்தா ரெண்ணுமெங்கள். (உ0சுசு)

காரியநிர்வாகமெல்லாங்கண்டீரோவின்னமுமா
டாராலுஞ்சொல்லவடங்காதே நேர்மொழிந்த. (உ0எ0)

விச்சரிதங்கேட்டுமனமேங்காதீரெவ்விதமும்
பட்சமுடனுங்களைக்காப்பாற்றுவே னிச்சயங்கா. (உ0எக)

ணின்னதாரித்ரமெவராலொழியுமென்றே
யுன்னிப்பலவாயுசாவினேன் அன்னவனைச் (உ0எஉ

## சிவபெருமான் பாட்டுடைத்தலைவனையறிவித்தல்.

சித்தத்திற்கண்டேனச்சேரமானுக்குமிவன்
பத்தத்தனையதிகபண்பினா னித்தலத்தில். (உ0எங)

மங்களமென்மேலும்வளரமனுவிக்யானச்
செங்கோல்செலுத்துந்திறலுடையான் செங்கமலப் (உ0எச)

* பிணிமுகம்-மயில்.

பூமானூரத்தான்புகழுடையனேந்திரநற்
கோமானளித்தகுலக்கொழுந்து ஓமெனவு. (உ0எரு)

மூவடியாய்நின்றுலகில்முத்தொழிலடைந்துமெந்தன்
சேவடியையுள்ளிருத்துஞ்சிந்தையான் மாவளஞ்சேர். (உ0எசு)

திண்ணியவான்முந்தியவோர்ஜென்மாந்திரத்திலவன்
பண்ணியதபோபலத்தின்பான்மையால் மண்ணுலகை. (உ0எஎ)

யாளப்பிறந்தானவனேமனுகுலந்தி
னீளச்சிறந்தநிலைமையினான் வேளைப். (உ0எஅ)

பொருந்துமெழிலான்புலவர்கள்கொண்டாடித்
திருந்துவிமாலைபுனைசீமான் பரிந்தேனது. உ0எகூ)

பாய்குரியதோழனையொப்பானகனபாக்கியவா
னேங்குவலக்கண்ணுமுயர்குலத்த ஞன்குமறை. (உ0அ0)

யாய்ந்தவாக்குநாவலர்க்குமாதுலர்க்குமிக்கபொரு
ளீந்துசிவந்தவிருகரத்தான் றூழ்ந்துமிகப். (உ0அக)

பொன்மலர்கொண்டேத்துசிவபூஜாதுரந்தரன்மா
தன்மபூபாலன்சவுரியவான் அன்னமதி. (உ0அஉ)

யாரணமுங்காணவறியாதமதருளைப்
பூரணமாய்ப்பெற்றபுகழ்வேந்தன் வீரசிவ. (உ0அங)

கங்கைநகர்க்காதீனகாவலவன்பாவலர்மேற்
றங்குமபிமானமுள்ளசற்குணவான் வெங்கயந்தேர். (உ0அச)

கூந்தலணிமாவுமைக்குங்கோமானுயர்துரைச்சிங்
கேந்த்ரனுக்கிப்போழ்திலிதமுறநா ளைந்தெழுதி. (உ0அரு)

யேந்துதிருமுகமொன்றீவேனதையவன்பாற்
போந்துநல்குமெல்லைமனம்பூரித்துச் சாந்தகுண. (உ0அசு)

விற்பனவானுந்தமக்குவேண்டுவனவெவ்வளவோ
பற்பலசம்பத்துகளும்பாலிப்பான் முற்பாண, (உ0அஎ)

பத்திரனென்பானொருவன்பாரிலிலம்பாடடைந்
கஸ்திதனைநீக்கக்கருதியே பத்திதனி. (உ0அஅ)

லன்பன்மலைநாட்டுக்கதிபனாந்தச்சேரமான்
தன்பாலனுப்பத்தகுந்தபடி பொன்பரிசு (உ0அகூ)

செய்தானவனிலுமித்தேர்வேந்தனீகையினிற்
கைதானென்சொல்வேனகற்பகமே மெய்யுரையீ. (உகூ00)

## சிவபெருமான்பாட்டுடைத்தலைவற்கு திருமுகங்கொடுத்தல்.

தாகையினுனீவிரனைவர்களுமிக்கணமே
யேகியந்தப்பூதிபாலெய்தியே மாகனமாய்த். (உ0கூக)

தேக்குபொருள்பெற்றுச்செழித்துவாழ்வீர்களென்ற
வாக்குக்கடங்காமகிழ்ச்சிகொண்டு நோக்கிய. (உ0கூஉ)

சீலர்மதுரேசனையுந்தேவிகயற்கண்பதமுஞ்
சாலவணங்கித்தமிழ்ப்பாடி யாலயத்தை. (உ0கூங)

மூக்கால்வலம்புரிந்துமூர்த்திதிருமுகம்பெற்
றக்கோவில்வாயலரணீங்கிச் செக்கர்வண்ணக். (உ0கூச)

## திருமுகம்பெற்றுப்பிரபுவின் சமூகத்துக்கேகுதல்

கோகனகமாதுகுடிகொண்டசிவகங்கைநகர்க்
கோகையுடனேகவாருமித்தோங் காகங்கள். (உ0கூரு)

கூவிவலமாகிவரக்கோலக்கருடனிடந்
தாவியரிகீர்த்தனமிசைப்ப யாழ்பினிக். உ0கூசு)

கைகூடிவந்ததெனக்காதலுடனெய்தியுயர்
மெய்கூடிவாழ்நகரைமேவினோம் தெய்வீகத். (உ0கூஎ)

## சிவகங்கை நகரச்சிறப்பு.

தேரோடுவீதிகளுஞ்செம்பொனெடுமாமதிலுங்
காரோடுலாவுகவிக்கொடியுஞ் சீரார். (உ0கூஅ)

வனசத்திரள்மலிந்தவாவிகளும்வந்தோர்க்
கனசத்திரமுந்வுமன்புந் தினமுமறை. (உ0கூகூ)

யாய்ந்துநெறிதிறம்பாவந்தணர்கள்வீதிகளும்
வாய்ந்தவணிகர்மணிமறுகும் வேந்தருக்கு (உக00)

[illegible]மகுடமுடிசூட்டநல்கும்
[illegible]ம்பொரனன்மறுகும் கோவைசியர், (உக0க)

வீதிகளுமிந்த்ரகுலவீரர்மணிவீதிகளுஞ்
சாதிபலவர்னத்தார்தன்றெருவு மோதுசனக். (௨௧௦௨)

கூட்டமுடனே தினமுங்கொள்ளல்விற்றல்செய்துநலங்
காட்டியொழுங்காகக்கடைத்தெருவுந் தீட்டியொளிர். (௨௧௦௩)

மாசுதைகள்தீறறிவயங்குமேன்மாடிதிகழ்
ராசபந்துக்களியல்மறுகுந் தேசுலவு (௨௧௦௪)

மன்னகரத்தினலங்காரமத்தனையு
மென்மேலும்பார்த்துவியப்பூறிப் பின்னுமந்த. (௨௧௦௫)

## அரண்மனைச்சிறப்பு.

மாநகரமென்னுமநாணிப்பதக்கமிசை
யானநடுநாயகமணிபோல் வானளவிச். (௨௧௦௬)

சிங்காரமாகச்சிறந்தமகாமேருவெனா
மங்காதவாசல்மணிமுகப்பும் தங்கவுயா. (௨௧௦௭)

மாடிகளுஞ்சுற்றிவளைந்தநெடுமதிலும்
மேடைகளும்பந்தடிக்குமேடைகளும் நீடுதமிழ். (௨௧௦௮)

தேரிங்கிலீஷ்பூதம்றேகபலமாஞ்சிலம்பஞ்
சார்வுறமேலோங்குகல்விச்சாலைகளும் பேர்பெரிய. (௨௧௦௯)

கோபுரமுஞ்சொர்னக்குடங்கள்பதித்திலங்கு
தாபரமும்வெள்ளைச்சயடாலும் தூபியினில். (௨௧௧௦)

மங்குல்படிந்துலவும்வண்மையெலாங்கண்டிதுவே
யெங்கோனரண்மனையென்றெய்திநோக் திங்கள்மணி. (௨௧௧௧)

நற்படிகத்தாலமைத்தநல்லசபாமண்டபமும்
பொற்பணியினுலிழைத்தபோதிகையு முற்படுத்த, (௨௧௧௨)

வஸ்தானசத்திரதர்மாசனமுஞ்சீமைய்யய
னத்தொடுதர்பார்புரியாபீசுகளு மொய்த்தஜனக். ௨௧௧௩)

கூட்டமிடும்பேரொலியுங்கூரியபியோன்கணின்று
க்யாட்டுடன்பாராக்கொடுக்குங்காவல்களும் நாட்டரசர். (௨௧௧௪)

நாடித்திறைசெலுத்தநற்சமயங்கிட்டாமற்
கூடிக்குலாவுசதிர்க்கொட்டகையும் நீடுமத. (௨[illegible])

வாரணத்திரளையமும்வாம்பரியின்சாலைகளும்
பூரணகும்பங்களிட்டபொன்முடியும் வீரர்களை. (உககசு)

வேங்கையுடனேபொருதவிட்டுவிளையாடல்புரி
தாங்குமிருகாசயத்தின்சாலைகளும் பாங்கான. (உககஎ)

பூஷணநல்லாடைபொருந்துகிறிபொக்கிஷமும்
மாசகலுக்ராணமணிமண்டபமும் வாசமனே. (உககஅ)

விர்த்தியாபீசுமிக்தமேதினிக்காதாரமுள்ள
வர்த்தனைரிக்காரட்டுமால்களுமெய்ப் பத்தியுட. (உகககூ)

ஸிம்பர்தனைக்காக்குமிராஜராஜேஸ்வரியா
மம்பிகையாள்வீற்றிருக்குமாலயமு மம்புவியாள். (உகஉ0)

மாபோஜராஜேந்த்ரன்வந்துதினஞ்சேவைபுரி
தேபூஜைக்கோவிற்றிருப்பணியும் ராஜகுல (உகஉக)

அன்னநடைமின்னார்களார்ந்துஜலக்கிரீடைசெய்யும்
வன்னமணிநீராவிமண்டபமும் அன்னவதில். (உகஉஉ)

வாழைகொழுமிச்சைவளர்மாதளைகமுகு
சூழுமலர்வாசமிகுசோலைகளும் கேழ்கிரணத். (உகஉங)

திங்கள்மணியாலிழைத்துச்சேருஞ்சிகரமதிற்
றங்கக்கலசந்தனைநாட்டிப் பொங்கு (உகஉச)

மவிரொளியம்பாரிபுனைந்தஷ்டகஜந்தாங்குஞ்
சவுமியவிலாசச்சபையுங் கவினுறவே (உகஉரு)

தங்கத்தகடழுத்தித்தாமணிகுயிற்றி
யெங்கும்பளீரென்றிளங்கதிர்போ லெங்கள். (உகஉசு)

சவுரியவான்மேவிச்சபைவீற்றிருக்குங்
கவுரிவிலாசத்தின்கதிப்பும் நவமுலவு. (உகஉஎ)

செம்பொனணிமேனிலமுஞ்சித்ரமணிமேடையும்பொற்
கம்பமிகநாட்டுபலகட்டிடமு மம்பவளத். (உகஉஅ)

தூண்கணிறுத்தித்துலங்குகருங்கற்சவுக்கை
மாண்புகளும்ரத்னமணியரங்கும் காண்கரிய. (உகஉகூ)

விந்தையெல்லாங்கண்டுவியப்புற்றிமையவர்கோ
னுந்துமணிமாளுமிதற்கொவ்வாதென் றந்தமுடன். (உகங0)

சிந்தைமகிழ்ந்துஜெயஜெயவென்றார்ந்தஜனச்
சந்தடியுட்சிக்கித்தகையாறி விந்தைவளர். (௨௧௫௧)

மன்பானெருங்கிவருகாரியக்காரர்
தன்பானெருங்கிமெல்லச்சாற்றினே மென்சார்ந்த. (௨௧௫௨)

நீவிர்கள்யாரென்றார்நிகழ்ந்ததையெல்லாம்புகல
வாவலுடன்கேட்டவருமன்புற்றுத் தேவபிரான். (௨௧௫௩)

வாய்மைதருநல்லமகிழ்ச்சிச்சமயமிதே
போய்வாருமென்றுள்ளேபோகவிட்டார் தூயமணி. (௨௧௫௪)

பத்திபத்தியாகப்பதித்தகவுரிவிலா
சத்திவிலங்குந்தனிமுகப்பிற் சுத்தனங்கு. (௨௧௫௫)

பீதாம்பரமுடுத்திப்பின்னுநிலையங்கிதொட்டு
மீதார்ந்தசால்வையதின்மேலணிந்து ஆதியடி. (௨௧௫௬)

சேருமுடிமீதிற்றிகழ்ந்தமகுடமகா
மேருவிடைத்தோன்றும்வெயில்நிகர்ப்பச் சாருமிரு. (௨௧௫௭)

காதில்வயிரக்கடுக்கனெடுமுருகுஞ்
சோதிப்ரகாசச்சுடர்விரிக்கச் சாதிமணி. (௨௧௫௮)

யங்கதகேயூரவணிகண்டிவாகுவலே
யங்கள்புயத்திலழகார்ப்பச் செங்கமலே. (௨௧௫௯)

மார்பினில்முத்தாரமதாணிப்பதக்கமுடன்
றார்பொருந்துபூணூற்சரமிலங்க நேர்கரத்திற். (௨௧௬௦)

கைக்கடகந்தோடாக்கணையாழிமோதிரங்கள்
மிக்கவெழில்காட்டிமினுமினுக்க வுக்கமதிற். (௨௧௬௧)

சிங்கமுகப்பிட்டுசிறந்தநவரத்னமணித்
தங்கவரைஞ்ஞாணுந்தகதகென வெங்களத்திற். (௨௧௬௨)

சத்துருக்களாவிதனையருந்துங்குற்றுடைவாள்
வைத்திடையிற்சேர்த்துவரிந்துகட்டிக் கத்துகடல். (௨௧௬௩)

## பிரபுவின் கொலுச்சிறப்பு.

காசிலமெலாம்புரக்குமால்கவுரிவல்லவனெம்
கோன்துரைச்சிங்கேந்திரன்கொலுவாகத் தீரனே. (௨௧௬௪)

ஜெயமாதுநின் றுஜெயம்ஜெயமென்றோதிப்
புயமேனடனம்புரியச்    சுயமதிய. (உகசரு)

மாமுகத்தைத்தன் னுடையமாளிகையென்றேமதித்துப்
பூமலராள்மேவிப்பொலிந்தோங்கப்    பூமா. (உகசசு)

பராக்குபலவீமாபராக்குரெகுராமா
பராக்கென் றுகட்டியர்கள்பாட    விராக்கதிர்போற். (உகசஎ)

கொங்குலவுபூச்சக்ரவாளக்குடைநிழற்ற
மங்கையர்கள்வெண்சாமரையிரட்டப்    பொங்குவியம். (உகசஅ)

பூவாடைபோலுமிகப்பொம்மென்றுலிக்கரட்டைப்
பாவாடைகுஞ்சம்பணிமாற    மாவீணை. (உகசகூ)

மத்தளங்கைத்தாளசுரமண்டலம்புள்ளாங்குழலோ
டொத்திசைக்கராகவொலிமுழங்கத்    தத்தைநிக. (உகரு0)

ரன்னவிலைமாதரபிநயங்கள்பாராட்டி
நன்னயஞ்சேரின்படம்புரிய    பொன்னன்ன. (உகருக)

எம்ப்ரஸ்மகாராணியார்கவர்னர்யாவர்களு
நம்பியுளமதிக்குநற்கனவான்    தென்புமிகும். (உகருஉ)

தண்டுசிவகங்கைக்கரசுநிலைகாட்டிவைத்து
விண்டலத்துங்கீர்த்திபெற்றமேன்மையான்    தண்டுளவ. (உகருங)

நாராயணாயநமவென்றனுதினமும்
நேராய்த்துதித்துவருநேர்மையான்    சீரார்ந்த. (உகருச)

தொன்மதுரைமீனாக்ஷிசோமசுந்தரேசாிரு
பொன்மலர்த்தாள்போற்றும்புனிதவான்    நன்மைதிகழ். (உகருரு)

மங்களமல்லேனிகுலவானழகர்சாமிதரு
சிங்கமெனவந்துதித்தசெல்வவான்    பொங்கு. (உகருசு)

சகலகலைவலவனயஜனகரமணியநிபுண
னகிலமுழுதிசைபரவுமமிர்தகுண    னுகுதருண. (உகருஎ)

வுசிதமுகிலனையகொடைவுதவுகரதலனிலகு
சசிவதனவபயஜெயபதாபுனிதன்    வசியமிாக. (உகருஅ)

மதமெழுதுபுயசயிலவனசதளநயனகெறு
விதகரடசமரகரியிசையுதையன் மதனதுரை. (உகருசு)

பண்டலர்தண்டமடாந்துஜெயங்கொடு
வண்டடர்தும்பைவனைந்திசை கொண்டிடு. (உகசுo)

தந்திரநன்சதுரங்கதளஞ்செறி
யிந்திரனென்றுலகின்புற வந்துபுகழ் (உகசுக)

மன்னுஜமீன்ஏஜண்டுமாலவேங்கடசாமி
மன்னனருகில்மகிழ்ந்திருக்கப் பின்னனுயர் (உகசுஉ)

காரியவான்மானேஜர்காசிவிஸ்வநாதமுகில்
நேரிருந்துசீமையகவாணிகழ்த்தப் பாரிலா. (உகசுஙு)

தாயஞ்செலவுஞ்ஜகராஜர்கப்பமதா
லாயவரவுமதன்பெருக்கும நேயமனே. (உகசுச)

விர்த்திச்சிரஸ்தேதார்மிக்ககருணீகர்களும்
வர்த்தனைமிகுங்கணக்குவாசிக்கச் சித்தமதி. (உகசுரு)

வாய்ந்தவவதானவக்கணைகள்சோர்வுபடா
தாய்ந்தெழுதுநல்ராயசகாரர் வேந்தர்விடும். (உகசுசு)

அர்ஜியைவாசித்தங்கவர்க்கெழுதுமுத்தரவிற்
சற்சமையங்கண்டுசயன்வாய்கச் சொற்சிறந்த. (உகசுஎ)

பார்வேந்தர்சூழ்ந்துபணிந்துமனுக்கேட்ப
யோர்வேந்தர்தத்தமியல்கூற வீரியத்தைச். (உகசுஅ)

சார்ந்தநளகர்த்தர்களுந்தானபதிகளுங்கற்
றோர்ந்தமனுசாஸ்திரவுசிதர்களுந் தேர்ந்திடமன். (உகசுகூ)

னீதிபுகழ்ந்தோதநெடுநாட்சிறையிலுற்றோர்
பாதமதில்வீழ்ந்துபணிந்துகெஞ்சப் பாதத்திற். (உகஎo)

சூட்டியகண்டாமணியுஞ்சோமத்தலைவிருதும்
நீட்டுசுடர்காட்டிநிகழ்ச்சியுறத் தோட்டுமல. (உகஎக)

ரானனமாந்தெள்ளமுதவம்புலியின்சோதிகண்டு
மானவர்கட்காவிமலரவிழச் சேனைதிகழ். (உகஎஉ)

ராணுவக்கூட்டங்களிடைந்துநெருங்கவலி
யாணவஞ்சேர்தந்திகிள்ளையார்ப்பரிக்க நீணிலத்தில். (உகஎஙு)

மாவளமுற்றோங்கிவளர்குவளைவேலிநகர்ச்
சீவிதம்பெற்றோங்குகனசெல்வத்தார் மேவுகன. (உகஎச)

ராஜாக்கூட்டங்களிதஞ்சேரொழுங்காக
நேசமுடன்சூழ்ந்துநிறைந்துநிற்கப் பேசுபுளி. (உகஎரு)

யங்குளத்தில்வாழ்வோராரியகுலகர்த்தாக்கள்
வங்கிசத்தில்வந்தமரபுடையார் பொங்குபட்டை. (உகஎசு)

நாமநுதலிற்றுலங்கநாய்க்கமார்வாளேந்தி
மாமடங்கல்போலுமருங்குநிற்ப் வாய்மைமிகு. (உகஎஎ)

சேருவைக்கூட்டங்கள்சினத்தவடிவாளபிடித்துப்
போரெங்கேயென்றுபுயம்புடைக்க நேர்கையினிற். (உகஎஅ)

றங்கமடற்கொண்டுநலஞ்சார்வெள்ளிலைச்சுருளீந்
தங்கடப்பக்காரரடுத்துநிற்கத் தங்கமொரு (உகஎகூ)

பாரமிட்டுவேலைப்பணிதிகழ்பொற்காளாஞ்சிக்
காரர்கையிலேந்திக்கதித்துநிற்க வாரமணிச். (உகஅ0)

சுற்றிலங்கச்சாலர்தைத்துச்சோடினைச்சிற்றுலவட
வெற்றிவிசிறிக்காரர்வீசிநிற்க முற்றலிலுங் (உகஅக)

கள்ளற்கஞ்சாதகுடைக்காரரிருபாலுநின்று
வெள்ளித்தீவட்டிமிசைப்பிடிக்கத் தென்னூர்வடி. (உகஅஉ)

வேலாட்கள்மொய்த்தவெடிக்காரர்மற்றுமுள்ள
காலாட்கள்கைகட்டிக்காத்துநிற்கச் சூளார்ந்த. (உகஅ௩)

கார்க்குலங்கள்போலுங்கருங்கிடாயொன்றொடொன்று
மூர்க்கமுடன்றாக்கிமுனைபொருதப் போர்க்குவரக். (உகஅச)

கூவிநிபமின்றிக்குரோதித்தயர்பொருதுஞ்
சேவலொலிச்சத்தஞ்செவிடுமண்ட மேவுசெவற். (உகஅரு)

காடைகவுதாரிகருங்கொண்டலாத்திகளுஞ்
சாடியொன்றோடொன்றுசமராடச் சோடியவஸ். (உகஅசு)

தாதுகளுமல்லாகளுந்தந்தொழிலைக்காட்டிநல
மீதுயர்வேடிக்கைமிகவிளைக்கச் சோதிடத்தி. (உகஅஎ)

லஞ்சாதரிராரண்மனைப்புரோகிதாள்
பஞ்சாங்கமோதிப்பலனுரைக்கக் கஞ்சமலர்க். (உகஅஅ)

கோவணங்குந்தேபூஜைக்கோவிற்குருக்கள்மார்
தேவப்ரசாதந்தினமுதவ மேவிதுபோற். (உகஅகூ)

நட்டிலிட்டுமேற்றத்தலத்தார்களீந்துபரி
வட்டமதுகட்டிமலர்சூட்டச் சிட்டரெனு. (உககூ0)

மாகனவித்வான்களிசைவாழ்த்தியருகிருக்கப்
பாகவதாள்சங்கீதப்பாட்டுரைக்கப் பூகம்விளை. (உககூக)

கேழ்மணிசேர்கொட்டகுடிக்ராமமகாஜெனமும்
வாழ்வுயர்வேம்பத்தூர்மகாஜெனமுந் சூழ்பிரம. (உககூஉ)

ஞூர்வாழ்மகாஜெனமுமோதருவேதாங்கமதைப்
பார்வையினிற்றேர்ந்தகனபாடிகளும் பூரணமாய்ப் (உககூங)

போதநெறியாகமபுராணமுணர்சாஸ்திரிகளு
மாதிமறைவைதிகநூலந்தணரும் நீதிபரன. (உககூச)

மாசிர்பொருந்திமகிமீதிலவாழ்ந்திரெலன்
முசீரவதிந்தக்ஷதைவழங்கப் புகிதனும். (உககூரு)

மன்னர்களிற்சீர்த்திபெற்றமாதுங்ரபாணடியனபோல்
மின்னியசிங்காதனத்திலவீற்றிருந்த னன்றமிலேக். (உககூகா)

கண்டமயிலிட்டமெனக்காமுற்றிறைஞ்சியெய்கோன்
கொண்டகருணைக்குறிப் றிந்து மண்டலிகர். (உககூஎ)

மகாநாட்டார்பிரபுவைக்கண்டுபுகழ்தல்.

மன்னுவிஜயவிக்ரமார்ககாசிலாக்கியசம்
பன்னுநாமங்கைதங்கர்ப்பாண்டியா கன்னுவ. (உககூஅ)

தாராதலவடலர்ந்தாராவெளியவர்க்கா
தாராவுதாராசவுந்தரா தீரரண. (உககூகூ)

வீராகெபீராவிமேனாதரசகல்வியலங்
காராசிங்காராசண்டீரவா ஆரமுத. (உஉ00)

சோமாநல்லன்னசத்ரசோமாசிறந்தஜெப
பூமாவிற்காமாபுரந்தரா தாமபல. (உஉ0க)

வீமாசங்க்ராமாவிவேகப்ரதாபபல
ராமாசிராமாநரேந்திரா மாமதகோ. (உஉ0உ)

தண்டாவுத்தண்டாசமரகோலாகலதோர்த்
தண்டாதிதண்டாதசற்குண தண்டமிழிற். (உஉ0ங)

# திருமுகவிலாசம்.

நேர்ச்சிப்பெருங்கடலேதேசாபிமானமதி
லூர்ச்சிதமுற்றோங்குமுடையானே மார்ச்சரியம். (௨௨0௪)

காட்டுமிகலார்கருவறுத்தன்னார்பதியைத்
தீட்டுபுலவோர்க்களிக்குஞ்செம்மலே நாட்டமொடு. (௨௨0௫)

சொற்றவறுவள்ளல்துரையுடையமணாட்டிரமால்
நற்றவத்தால்வந்தநவமணியே நற்றவனைக் (௨௨0௬)

காக்கும்பெருமானேகண்ணகன்றஞாலமதி
லார்க்கும்பெரியவரசனே தேக்குபுகழ். (௨௨0௭)

போஜராஜேந்த்ராபுவனபரிபாலகா
ராஜராஜேந்த்ரஜனரக்ஷகா விசியன்னான். (௨௨0௮)

மான்சிரமற்றோயவடியாசுகந்தொடுத்த
கோன்றனைச்சிங்கேந்த்ரவெங்கள்கோமானே மானிலத்திற். ()

றோங்கரியபற்றமதிற்றனைலேந்துவாடினதும்
தேங்குமதுரைச்சிவன்பாற்செப்பியது யாங்கவரும். (௨௨௧0)

தேவரீர்க்காகத்திருமுகந்தந்தாரெனவு
மாவலுடன்கூறியருகுநின்றோங் காவலனும். (௨௨௧௧)

## பிரபுசிவபெருமானைத்துதித்தல்,

தென்மதுரையீசரென்றதெள்ளமிர்தமாமொழிகேட்
டின்பமுறப்பூரித்திருதோளும் நன்கைத். (௨௨௧௨)

திருமுகத்தைவாங்கித்திருவிழியிலொற்றிப்
பரவிப்பலதரமும்பார்த்துக் கருணைபுரி. (௨௨௧௩)

மங்கையுமைபாகாமனோகராமான்மழுவுஞ்
செங்கைதனிலேந்துஞ்செயதரா கங்கைச். (௨௨௧௪)

சடாதராவெள்ளிச்சபைதனிலன்றாடு
நடாகராவெள்ளிமலைநாதா கடாசலத்தின். (௨௨௧௫)

போர்வையுடையாபுராந்தகாவின்மதனைப்
பார்வையினிற்காய்ந்திடுபராபரா காரணைய. (௨௨௧௬)

கண்டாவகண்டாகராசங்கராவடியர்
கொண்டாடிவாழ்த்துங்குருபரா மண்டுயிர்கட். (௨௨௧௭)

காவியனையாயரகரசம்போமகா
தேவாவென்றேத்தியுட்டியாணித்துக் கூவிமென்மை. (உஉகஅ)

வாருமெனவழைத்துமன்னியவிப்பஞ்சமதிற்
சார்வின்றிநின்றேரதயங்கினீர் பாரிலுங்கட். (உஉகசு)

கன்பாகயாமிருக்கவையோநீரிற்றைவரை
யென்பாலேவ்வாராதிடைந்தீர்கள் என்பாரம். (உஉஉ0)

பூண்டானெனையும்பொருளாய்மதித்தனரோ
ஆண்டாரென்மேற்கருணையானவோ தேண்டியன்னுள் (உஉஉக)

ஸ்ரீ நுமால்காணுகவேதாந்தமூர்த்திபரந்
சாதிதிருவாய்மலர்ந்தசொற்போலும் போதுகன. (உஉஉஉ)

பாக்கியங்கள்நல்கியுங்கள்பஞ்சமனைநீக்கிநீதி
தேக்களகையானெனவுஞ்செய்வனெனக் கோக்குவடு. (உஉஉங)

## பிரபுநாட்டாருக்குவெகுமதி செய்தமைகூறல்.

மேங்கவுயர்ந்தோரிறையாயிரக்கலங்கொண்
டோங்குகளஞ்சியத்திலோர்தினுசாய்ப் பாங்குளசம். (உஉஉச)

பாவுரியநெல்லிப்பதினுயிரக்கலமும்
பாவுமின்றவித்துமதிப்பாதியாய்ப் தாவியமுன். (உஉஉரு)

னேர்க்குந்தவங்காவெருதுக்குழாங்களொடு
பார்க்குட்பலுகப்பகுதிறையும் கார்க்களிற்றை. (உஉஉசு)

பார்த்துநகைக்கும்பரம்புக்கடாக்கள்வயற்
சேர்த்துக்கிடைமறிக்கச்செம்மறிய மார்ந்தலுறத். (உஉஉஎ)

தக்கபலபூஷணமுஞ்சார்ந்தபலதினுசும
ரொக்கத்திலோரிலக்ஷரூபாயு மிக்கவுள்ளந். (உஉஉஅ)

தேவையவாநீங்கச்சிறப்புகளுஞ்செய்தபின்னர்
மேவித்திருமுகவிலாசமதைப் பூவுலகிற். (உஉஉகூ)

## இப்பிரபந்தவித்வானுக்கு சம்மானஞ்செய்தல்.

சீர்த்தியுறப்பாடித்திகழவரங்கேற்றிவைத்த
மூர்த்திமுடிக்கங்கைமுதுகுலத்தன் பார்த்திபர்கொண். (உஉங0)

டாடுமமிர்தகவிவில்லியப்பனுக்கு
நாடுடையான்சின்னைநலிகூர்ந்து நீடுமணி. (உஉஙக)

பார்மன்னன்செய்திடுமிப்பாரவுபகாரம்போ
லார்முன்னஞ்செய்தார்சொல்லஞ்சுகமே சீர்மன்னு. (உஉசள)

மண்ணுலகையாளவந்தமால்துரைச்சிங்கேந்த்ர துரை
யண்ணியநாட்டாரையருகழைத்து வண்மையுளீர். (உஉசஅ)

சிந்தையுடனீவிரினித்தேவையுள்ளகாரியத்துக்
கெந்தனிடம்வாருமினிதளிப்பே னுந்தமூர் (உஉசகூ)

சென்றனைகையான்போற்சிறந்துமிகவாழ்ந்திருப்பீ
ரென்றுவிடைதந்தானிறையவனும் வென்றிதிகழ். உஉருo)

மாமாறன்றன்னையுளம்வந்தித்திறைஞ்சியந்தக்
கோமான்புகழைமிகக்கொண்டாடிக காமுறர். (உஉருக)

நடர்ந்துஜனம்நெருங்குமாஸ்தானவாசற்
கடந்துவெளிமாவிற்கலந்து மடங்கலன்னன். (உஉருஉ)

## நாட்டார்கள் தங்களூர்சேர்ந்து வாழ்தல்.

தந்தபொருளெல்லார்தருஞ்சகடமீதேற்றி
விந்தையுள்ளவாகனங்கண்மேலிவர்ந்து சிந்தைநனி. (உஉருா)

லோவ்விப்பொருள்பகிர்ந்தங்குண்மையுறவாடிமகிழ்ந்
தவ்வவர்களூர்புகுந்தாரப்பொழுதே நவ்வியிளைக். (உஉருச)

கண்டமடமாதர்களுங்காதலரும்பூதலருங்
கொண்டேல்பூரித்துக்குதித்தெழும்பிக் கண்டமட்டு (உஉருரு)

முண்டார்களித்தாருகந்தார்செருக்கடைந்து
கொண்டாடினார்குலாவினா மண்டுகுழற். (உஉருகூ)

கற்றைச்சடைப்பிடித்தகட்டறுத்துச்சீவிமலர்ச்
சுற்றுஞ்சிரவணியுஞ்சூட்டினார் மற்றுமுள்ள. (உஉருஎ)

பீதாம்பரமணிந்தார்பேராபரணமெல்லாம்
பாதாதிகேசம்வரைபண்ணிட்டார் மாதிரதி. (உஉருஅ)

போலழகுபெற்றார்புருடர்களுமவ்வாறே
சீலமதனைப்பாய்த்திருந்தினரே சேல்விழியார்க். (உஉருகூ)

கொட்டியவெளவாற்போலுலர்ந்ததனங்கள்விம்மிப்
பொட்டெனப்பூரித்துப்புடைத்ததுகண் டிஷ்டமற்றங். (உஉகூ0)

ாமையப்பர்போலுமடங்கிமிகவேகிடந்த
ாமயநாயக்கர்கதித்தெழும்பி யேமமென்றுந். (௨௨௬௧)

ாமமென்றும்பாராமற்சந்ததமதேதொழிலாய்க்
ாமவிளையாட்டிற்கதித்தனரே பூமிசையில். (௨௨௬௨)

## மழைவருஷித்துப் பஞ்சம்நீங்குதல்.

நன்னுயிர்கடோறமருவுசிவசொக்கேசர்
தன்னருள்பூரித்ததயவுறிந்து பின்னுதிரி. (௨௨௬௩)

வானநவக்ரகங்களவ்வவர்கடங்களெதாஸ்
தானங்கடன்னில்வந்துசார்ந்திடவும் வானுறமி. (௨௨௬௪)

யன்னளிராத்திரியேயார்த்தசப்தமேகமதின்
முன்னுமாவர்த்தமுகில்கிளம்பி மின்னலுடன். (௨௨௬௫)

விற்போட்டிரைந்திருட்டிமேவுமழைக்காலூன்றிப்
பொற்போனன்மாரிபொழிந்தனவே யற்பகலா. (௨௨௬௬)

யெட்டுநாளாகவிடைவிடாதெங்குமழை
சட்டமுடனபெய்திடவித்தாரணியோர் பட்டடங்கா. (௨௨௬௭)

வானந்தவாரியினிலாழ்ந்திமனப்பூர்த்தியுறத்
தானந்தவமிரண்டுந்தானெய்த மீனுந்து. (௨௨௬௮)

வேகவதியேமுதலாய்வெள்ளங்கரைபுரண்டு
மாகனநீர்வாவியெங்குமல்கினவே சேகரமாய்த். (௨௨௬௯)

தேண்டுபசுக்கூட்டமுடன்செம்மறிகளுங்கொடுகி
யாண்டதெய்வசன்னதம்போலாடிநிற்க மூண்டவெயில். (௨௨௭0)

கிட்டப்பொருதகிளரெருமைக்கூட்டமட்டுஞ்
சட்டைபண்ணமற்கனைத்துத்தாவிநிற்க முட்டநின்ற. (௨௨௭௧)

கோட்டைச்சுவர்களெல்லாங்கோடையிடிபோன்முழங்கி
நீட்டிநிமிர்ந்துநிலம்படுப்பச் சூட்டாலே. (௨௨௭௨)

## சராசரங்களெல்லாஞ் செழித்தல்.

தீய்ந்துகருகிச்செறிந்ததருககளெல்லாம்
நேர்ந்துதழைத்தோங்கிநிழல்கொடுக்கச் சோர்ந்துமிக்க. (௨௨௭௩)

கண்ணிலுங்காணமற்கரிந்தபுல்லும்பூடுகளுந்
தண்ணிலைகளோடுதலைநீட்ட றுண்மையொடு. (௨௨௭௪)

தூங்கலாயன்றிடைந்ததும்பிக்குழாங்கள்மத
மோங்கியிறுமாந்தங்குரத்துநிற்கத் தேங்குதுகள். (௨௨௭௫)

மண்பறியத்தாளெறிந்தமாக்குலங்கண் மீறியெழு
விண்பரியைப்பார்த்துமிகநகைக்கப் பண்புறுநல். (௨௨௭௬)

லானிரைகள்கன்றுகளீன்றுதரமுற்றேகாம
தேனுவெனப்பால்சொரிந்துந்தக்கமுற மாநிலத்தி. (௨௨௭௭)

லெய்தியசராசரங்களெல்லாஞ்செழித்துயிர்க
ளுய்தலைப்பெற்றனந்தமோங்கினவே செய்களில்வந். (௨௨௭௮)

தேருழுவரோசைகளுமேய்வித்துணர்கலிப்பும்
நாரியர்நென்னாற்றுநடுமொலியும் பார்முழுது. (௨௨௭௯)

நன்னீர்மையந்தணர்களன்மறையினோசைகளு
முந்நீர்த்தொனிபோன்முழங்கினவே பன்மலரிற். (௨௨௮௦)

பீறிவருதேனொழுக்கும்பேரினியமுக்கனியின்
சாறுமோராறாய்த்தலைப்பெய்தி மீறிவயல். (௨௨௮௧)

விந்தையுடன்பாய்தலினால்விஞ்சுசெழுஞ்சாலிவளர்ந்
துந்திவெளிவான்முகட்டையொட்டியதே முந்திவிளை. (௨௨௮௨)

செந்நெலரிந்துசுமைசேர்த்துக்களங்கொடுபோய்ப்
பொன்னசலமன்னபம்போர்வைத்துப் பின்னை. (௨௨௮௩)

வலிபகடுபூட்டிவழுநகற்றிப்பாடிப்
பொலிபொலியென்றோதிப்புகழ்ந்து கலியகற்றும். (௨௨௮௪)

புண்ணியனும்பூதலத்தைப்போஷிக்குநெல்லையப்ப
வண்ணலைக்கண்டானந்தமாகினோம் விண்ணிவர்ந்து. (௨௨௮௫)

காணுந்தலைமேற்கணபதியைத்தாங்கியருள்
பூணுமலைபோற்பொலிந்தபூசகனைப் பேணிச். (௨௨௮௬)

சுகந்தழைக்கவந்தருளுந்தாய்மதுரிமையைக்கையான்
முகந்துகண்ணிலொற்றிமுகர்ந்திட்டுச் செகம்புரக்கு. (௨௨௮௭)

மன்னர்க்குச்சேர்கடமைவாரந்தனைச்செலுத்திப்
பின்னர்க்குடிவாரப்பெருக்கமதைக் கொன்மருவு. (௨௨௮௮)

மைப்பகடுபூட்டியுயர்வையங்கண்மீதேற்றிச்
செப்பரியநன்மனையிற்சேர்த்தினோ மெய்ப்புகழ்சேர். (௨௨௮௯)

## செல்வம்பெற்று வாழ்தல்.

தென்புலத்தார்தெய்வம்விருந்தொக்கறனென்றாய்
கைம்புலத்தாரோம்பறலையென்று முன்புலமை. (௨௨௯௦)

வள்ளுவனாரன்றுரைத்தவாக்கியத்தையுள்ளிருத்தித்
தெள்ளிமையாய்மிக்கசிரத்தையுட னெள்ளியநான். (உஉகூக)

மாமறையோர்போஜனங்கண்மாகேசுரபூஜை
க்ஷேமமுடனுடோறுஞ்செய்வித்து நேமமுடன். (உஉகூஉ)

சூழ்ந்தவிருந்தோடருந்திச்சொற்கலைநூலாய்ந்துநலம்
வாய்ந்தசெல்வந்துய்த்தினிதாய்வாழ்கின்றோம் வேந்தன்வடி. ()

வேலுடையான்முத்துவிஜயரெகுநாதனெனு
மால்துரைச்சிங்கேந்த்ரவரனருளாற் சூல்முதிர்ந்து (உஉகூச)

திங்கடொறுமங்கல்சிறந்துபொழிந்திடவு
மங்கலகுபேரரெனவர்த்தித்துப் பொங்கமுடன். (உஉகூரு)

றக்கவதிகாரந்தனைச்சார்ந்தநல்லடிமை
மக்கள்சுற்றம்பொன்மணிநெல்வாகனங்கள் மெய்க்குமிந்த. (உஉகூசா)

வைசுவர்யமெட்டுமடங்காவுவகைதர
வையகத்திற்பெற்றினிதாய்வாழ்கின்றோம் செய்யமலர்ச். (உஉகூஎ)

செந்திருவேயெங்களுடைசெய்திமுற்றுமாதியோ
டந்தமாயுன்பாலறிவித்தேன் சந்ததமும். (உஉகூஅ)

நெல்லுக்கிறைத்தநீர்வாய்க்கால்வழியோடிப்
புல்லுக்குமாங்கேபுசிதல்போற் றொல்லுலக. (உஉகூகூ)

## வாழி.

மெங்குஞ்செழிப்புற்றிசையும்புவியரசர்
செங்கோல்தழைத்துச்செயமோங்கித் தங்கிமலர்ச். (உஙூ00)

செங்கமலைவாழ்கச்செகமீதறம்பெருகி
மங்களமென்மேலு மிகவாழி. (உஙூ0க)

## திருமுகவிலாசம்

முற்றிற்று.

